# குரு



## தொழில் முறையில் பாதிப்பு இல்லை

ஸாதாரணமாகவே ஓர் இயக்கத்துக்கு அது சொல்கிற எதிர்ப்புக் கார்யத்தை வைத்துத்தான் பொது ஜன ஆதரவு கிடைக்கிறது; இந்த அளவுக்கு அது விதிக்கிற விதிகளுக்கு ஆதரவு கிடைப்பதில்லை. 'வெள்ளைக்காரனை விரட்டு' என்று காந்தி சொன்னதால் எல்லாரும் அவர் கீழே எதிர்ப்புக் கார்யத்தில் ஒன்று சேர்ந்தார்கள். ஆனால் அவர் விதித்த அஹிம்ஸை, ஸத்யம், ஒழுக்கம், ஈச்வர பக்தி முதலானதை எத்தனை பேர் எடுத்துக் கொண்டார்களென்று பார்த்தால் வருத்தமாகத்தான் இருக்கும். வெள்ளைக்காரனிடம் ஏன் நாம் கட்டுப்பட்டிருக்க வேண்டும் என்பதாக, அன்னிய ஆட்சியின் அதர்மத்துக்காக அவ்வளவு இல்லாமல், நம்முடைய ஸ்வேச்சா ஸ்வதந்த்ரங்களில் ஆசையால்தான் பெரிய போராட்டம் நடத்தியது. அந்த காந்தியே நம்மைச் சில தர்மங்களில் கட்டுப்படுத்துகிறார் என்னும்போது அவற்றை ஏற்றுக்கொள்ள மனஸ் இல்லை. பொதுவாக நம்முடைய தப்பை உணர்ந்து நம்மைத் திருத்திக் கொள்வதைவிட, பிறன் தப்பைச் சொல்லி எதிர்ப்பதில்தான் நமக்கு ருசி. நானே உங்களிடம் நாஸ்திகத்தையோ, கன்வர்ஷனையோ எதிர்த்துக் கூட்டம் போடுங்கள் என்று ஒரு வார்த்தை சொன்னால் உடனே பெரிசாக மஹாநாடு நடத்திக் காரஸாரமாகப் பேசி, தீர்மானங்கள் நிறைவேற்றுவீர்கள்; அதுவே, சாஸ்த்ர ஆசாரப்படி இப்படி இப்படி இருங்கள் என்று ஓயாமல் சொன்னாலும், கேட்கத் தோன்றுகிறதா?

இப்படித்தான் பௌத்த - ஜைன தர்மங்களை, தத்வங்களை ஜனங்கள் விசேஷமாக எடுத்துக் கொண்டு பின்பற்றவே

யில்லை. இதிலே அவர்களுக்கு ரொம்பவும் ச்ரமமாக, நடை முறை ஸாத்யமாக இல்லாத இன்னொரு அம்சத்தையும் சொல்ல வேண்டும். நீக்குப்போக்குள்ள நம்முடைய மதத்தைப் போலில்லாமல் அவை ரொம்பவும் ஐடியல் நிலையிலுள்ள அஹிம்ஸை, துறவு முதலியவற்றை எல்லா ஜனங்களுக்குமே வற்புறுத்தின. அதோடு ச்ரமண மதத்திலோ மிகவும் கடுமை யான நியமங்கள், உடம்பை ஏகமாக வருத்திக் கொள்வதாக. 'விட்டுப் பிடித்து', சௌக்யமாக, ஒவ்வொரு படியாக முன்னேற்றிக் கொண்டு போகிற நம் மதத்தைப் போல அவை இல்லை.★ ஆதலால் பெயரளவில் ஏதோ பௌத்த-ஜைன மதங்கள் பரவியிருந்தாலும் அவற்றை ஜனங்கள் மனமாற ஏற்று, நடத்திக் காட்டிவிடவில்லை. முக்யமாக, பாரம்பர்யத் தொழில் என்பது இப்போதும் போகவில்லை. இதை விட்டால் எவனுக்கு எந்தத் தொழில் என்பதில் ஏகப் போட்டியும் பொறாமையும் உண்டாகி எல்லாத் தொழில்களும் பாதிக்கப் பட்டு ஸமூஹ வாழ்வே சீர்குலையும் என்பதை ஜனங்கள் புரிந்துகொண்டு ஜாதித் தொழில் முறையையேதான் பின்பற்றி வந்தார்கள். அசோகர் முதலான புறச் சமயச்சார்புள்ள ராஜாக் களுடைய சாஸனங்களைப் பார்த்தால் நன்றாகத் தெரியும் – அவர்கள் ஆட்சியிலும் வர்ணதர்மம் இருந்துகொண்டேதான் இருந்தது; அவர்களும் அதை ஆதரித்துத்தான் வந்திருக்கிறார் கள் என்பது.

ஒன்று போதும், இதை நிச்சயமாக உறுதிப்படுத்திக் கொள் வதற்கு:

பிற்பாடு உதயனாசார்யர் முதலான தர்க்க சாஸ்த்ர நிபுணர் களும், வைதிகக் கர்மானுஷ்டானத்துக்கு அதிமுக்யத்வம் தந்த குமாரிலபட்டர் முதலிய மீமாம்ஸகர்களும், முடிவாக வேதாந் தியான நம்முடைய ஆசார்யாளும் பௌத்த - ஜைன மதங் களை ஜயித்துப் பழையபடி ஸனாதன வேத தர்மமே அதன் வர்ணாச்ரம விபாகத்துடன் நிலை நாட்டப்பட்டது. இது ப்ரத்யக்ஷமாக, ஹிஸ்டாரிகலாக நிரூபணமான விஷயம்.

---

★ அருள் உரை 47, 48, 49 புத்தகங்களில் இவ்விஷயம் விரிவாக விளக்கப் படுகிறது.

ஹிந்துக்களை மட்டம் தட்ட வேண்டுமென்ற ஒரே நோக்கத்தில் வெள்ளைக்காரச் சரித்திர ஆசிரியர்கள் எழுதி வைத்து, இப்போது நம்மவர்களும் வேதவாக்காக மதிக்கும் அபிப்பிராயப்படி, இடைக்காலத்தில் இங்கே அந்த மதங்கள் சக்திகரமாகவே ஸகல ஜனங்களிடையிலும் ஆழப் பரவி விட்டனவாம். இப்படியிருந்தால் மறுபடி எப்படி வைதிகமாக வர்ணவிபாகம் செய்திருக்க முடியும்? நடுவிலே எல்லா ஜனங்களும் ஒரே ஜாதியாகப் போன அப்புறம், பகவத் பாதாள் காலத்தில் மறுபடி ஜன ஸமூஹத்தை, 'நீ பிராமணன், நீ க்ஷத்ரியன், நீ வைச்யன், நீ நாலாம் வர்ணம்' என்று யாரோ உத்தரவுபோட்டு இந்தத் தேசம் முழுக்க அந்த உத்தரவுப்படிச் செய்ய வைத்தார்களென்பதற்கு ஓர் ஆதாரமுமில்லை. நல்ல வேளையாக, ஹிஸ்டரி என்ற பெயரில் எத்தனையோ கதை கட்டியிருப்பவர்கள் இம்மாதிரி எதுவும் ஜோடித்துச் சொல்லவில்லை. ஏனென்றால் இதை எந்த அறிவாளியும் ஒப்புக் கொள்ள மாட்டான் என்று அவர்களுக்குத் தெரியும்!

இயற்கையாகவே அமைந்துவிட்ட ஒன்றைப்போல, நீண்ட காலமாகப் பல ஜாதிகள் பாரம்பர்யப்படித் தொழில் செய்து வந்தபோது அதை எதிர்க் கேள்வி கேட்காமல் அந்தந்த ஜாதியில் பிறப்பவர்கள் ஏற்றுக்கொள்வது ஸஹஜமானது. ஆனால், ஒருதரம் இந்த ஜாதிக்கட்டு ஏற்பாட்டை உடைத்து விட்டு, அப்புறம் எவரோ வந்து மறுபடி கட்டுகிறேன் என்று ஆரம்பித்து, 'நீ இன்ன ஜாதி, நீ இன்ன ஜாதி' என்று நிர்ணயிக்க ஆரம்பித்தால் அதற்கு எவனும் கட்டுப்பட்டிருக்க மாட்டான். 'ஏன்' அவன்தான் இந்த ஜாதியாய் இருக்கட்டும்; நான் வேறே ஜாதியாயிருக்கிறேனே' என்றுதான் ஆக்ஷேபிப்பான். 'பரத கண்டம்' என்றே சொல்லும்படியாக விஸ்தாரமாக உள்ள நம்முடைய தேசத்தில் ஓர் தரம் பரவலாக ஒரு அபேதவாத ஸமுதாயம், அதாவது வர்ண வித்யாஸமில்லாத பௌத்த – சமண ஸமுதாயம் உண்டாகியிருந்தால் அதைப் பழையபடி தேசம் பூராவும் வர்ண தர்மக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்திருக்கவே முடியாது!

ஆசார்யாள் காலத்தோடு பர மதங்கள் படுத்துப்போக ஆரம்பித்து விட்டன என்று எல்லோரும் ஏகோபித்து அபிப்ராயப்படுகிறார்கள். அது வாஸ்தவம். ஆனாலுங்கூட அந்தத்

தனி மனுஷ்யர். ஒரு தேச ஜனங்கள் அத்தனை பேரும் ஜாதித் தொழிலை விட்டிருந்தால், இப்படிப் பழைய முறைப்படி மறுபடி வர்ண தர்மத்தின் கீழ் அவர்களைக் கொண்டு வந்திருக்க முடியாது! அவர் ராஜ ஸஹாயத்தினால் கார்யம் செய்ததாகவும் தெரியவில்லை. ராஜாக்ஞையால் வர்ணாச் சரமம் புதிதாக ஸ்தாபிக்கப்பட்டது என்பதற்கும் ஹிஸ்டாரி கலாகவோ, இலக்கியங்களிலிருந்தோ கொஞ்சங்கூட ஆதார மில்லை. நின்றசீர் நெடுமாறனைப் போல ஒரு ராஜா ஜைனம் மாதிரியான ஒரு மதத்துக்குப் போனபோதுகூட ஜனங்கள் நம்முடைய கோயில் குளத்துக்குப் போகவும், பஹிரங்கமாக நம் ஸமயானுஷ்டானங்களைச் செய்யவும் பயந்துகொண்டு பேசாமல் வேண்டுமானால் இருந்திருக்கிறார்களேயன்றி, அப்படியொன்றும் அத்தனை பேரும் நேராக அந்தப் பர மதங் களைத் தழுவிவிடவில்லை. கொஞ்சம் பெருவாரியாகவே தழுவிய சமயங்களில்கூடக் குலத்தொழில்களை விடாமல்தான் இருந்திருக்கிறார்கள். அதாவது ஸமய சிந்தனா ரீதியில் மாறுதல் ஏற்பட்டபோதுகூட, உலகத்துக்கான நடைமுறைக் காரியத்தில் மாறுதல் இல்லாமல் ஜாதிப்படிதான் காரியங்கள் நடந்தன. அதனால்தான் மதாந்தரத்துக்குப்போன ஒரு ராஜாவை ஸம்பந்தர் மாதிரி ஒருத்தர் மறுபடி ஹிந்து மதத் துக்குத் திருப்பியபோது, பயந்து கொண்டிருந்தவர்கள் மறுபடி தைர்யமாகக் கோயிலுக்குப் போவது, வைதிக அனுஷ்டானங் களைப் பண்ணுவது என்று ஆரம்பித்திருக்கிறார்கள்; பிற மதத்துக்கே போனவர்களில் சிலபேர் ஹிந்து மதத்துக்குத் திரும்பியிருக்கிறார்கள்; சிலர் மாறின மதத்திலேயே இருந்திருக் கிறார்கள்; இதெல்லாம் எப்படியானாலும் முதலிலிருந்து கடைசிவரை ஜாதி ரீதியான தொழில்கள் மாத்திரம் அப்படியே Intactஆக (கட்டுக்குலையாமல்) நீடித்து வந்திருக் கின்றன.



# பௌத்தம் – சமணம் தேசிய ரீதியில்...

ஆக, பௌத்த சமண மதங்களினால் பெரிய அளவுக்கு ஹிந்து ஸமூஹக் கட்டுக்கோப்பு பாதிக்கப்படவே இல்லை. ஸமூஹ விஷயமில்லாமல் ஸமய ஸம்பந்தமாகவே பார்த்தாலும் அதிலே விசேஷ ஈடுபாடுள்ள பிராமணர்களும், இதரர்களும் அப்படியே போய் அந்த மதங்களில் சேர்ந்துவிடாமல் தங்கள் தாய் மதத்திலேயேதான் இருந்து வந்திருக்கிறார்கள். கூன்பாண்டியன் சமணத்தில் சேர்ந்த பின்னுங்கூட அவனுடைய ஸாக்ஷாத் பத்னியான மங்கையர்க்கரசியும், முக்ய மந்த்ரி குலச்சிறையாரும் அதிலே சேராமல்தானே இருந்திருக்கிறார்கள்?

இதையெல்லாம்விட, நாம் எடுத்துக் கொண்டுள்ள விஷயத்துக்கு முக்யமாக, பௌத்த – சமண வித்யாசாலைகளுக்குப் போய்க் கல்வி கற்றவர்கள்கூட அப்பிராமணர்களில் அப்படியொன்றும் பெருவாரியில்லை. குலத்தொழிலையே அவர்கள் தொடர்ந்து செய்ததால், (முன்னேயே நான் எடுத்துக் காட்டினாற்போல்) இதற்கு வீட்டுப் பெரியவர்களுடன் சேர்ந்து தொழில் செய்ய ஆரம்பிப்பதே ப்ராக்டிகல் கல்வியாக அமைந்துவிட்டதால் அவர்களுக்குப் பள்ளிக்கூடம் போய்த் தனியாக வித்யாப்யாஸம் செய்ய வேண்டுமென்று இல்லை. ஆனாலும், தங்களுக்கும் எல்லா விஷயமும் வித்யாஸமில்லாமல் கற்றுக் கொடுக்கும் பள்ளிக் கூடங்கள் ஏற்பட்டிருக்கின்றன என்பதில், அறிவு நாட்டம் கொண்ட கொஞ்சம் அப்பிராமணர்கள் மட்டும் அவற்றிலே சேர்ந்து கற்றுக் கொண்டார்கள். மொத்தப் பாபுலேஷனில் இவர்கள் பெருவாரியாக இல்லை. (ஆனாலும் இதற்காகவே முன்னைவிட நிறையவும், பெரிசாகவும் வித்யாசாலைகள் ஏற்படத்தான் செய்தன!)

அதற்கப்புறம் அவர்களுடைய பிக்ஷு ஸங்கத்திலேயே சேர்ந்தவர்கள் ஸமூஹத்தில் மிகக் குறைவான சதவிகிதத்தினர் தான். முன்னைவிட அதிகமாகப் பிக்ஷுக்கள் பெருகி, அதனால்

பிக்ஷு தர்மம் நீர்த்துக் கேலி செய்கிற அளவுக்குப் போய் விட்டது என்பது வாஸ்தவந்தானென்றாலும், இதனால், ஜனங் களில் பெரிய சதவிகிதத்தினர் இப்படித் துறவியானதாக அர்த்தமில்லை. இதற்கு முன்னெல்லாம் முக்யமாகப் பிராமண ஜாதியினர் மட்டுமே முதல் மூன்று ஆச்ரமங்களை வஹித்து விட்டு அப்புறம் ஸன்னியாஸாச்ரமம் ஏற்றார்கள். அவர்களிலே கொஞ்சம் பேர் நேராக ப்ரஹ்மசர்யத்திலிருந்து ஸன்னியாஸ ஸ்வீகாரம் செய்துகொண்டார்கள். அப்போது பாபுலேஷனில் ஸன்னியாஸிகள் ஒரு பெர்ஸெண்ட், அரை பெர்ஸெண்ட் இருந்ததாக வைத்துக் கொண்டால், பௌத்த – ஜைன மதங்கள் ஏற்பட்டு ஸகல ஜாதிகளிலிருந்தும் அந்த மதங்களின் பிக்ஷு ஸங்கத்தில் ஜனங்கள் சேர இடமேற்பட்டபோது பாபுலேஷனில் நாலைந்து பெர்ஸெண்ட் ஸன்னியாசிகளானதாக வைத்துக் கொள்ளலாம். பாக்கி தொண்ணூறு (பெர்ஸெண்டு)க்கு மேலானவர்கள் பழையபடியேதான் இருந்து கொண்டிருந்தார்கள். ஆனாலும் ஒரு டாக்டர் இருக்கிற ஊரிலே மூன்று டாக்டர்கள் வந்தால்கூட ரொம்ப ஜாஸ்தி யாகத் தெரிகிறபோல, ஒன்று – அரை பெர்ஸெண்ட் என்பது நாலைந்து என்பதாகப் பல மடங்கு பெருகினபோது மிக நிறையப் பிக்ஷுக்கள், உண்டாகிவிட்டாற் போன்ற எண்ணம் ஏற்பட்டது. அதுவும் தவிர, ஹிந்து ஸன்னியாசிகளைப் போல, ஒவ்வொருவரும் தனித்து ஏகாந்தமாக ஸஞ்சாரம் பண்ணிக் கொண்டிருக்காமல், 'ஸங்கம் ஸங்கம்' என்று இந்தப் பிக்ஷுக் கள் கூட்டமாக ஒன்றுசேர்ந்தாலும், ஓர் இடத்திலே கூடிக் கல்விச்சாலைகளை நடத்தியதாலும் பெரிய அளவில் இருக் கிறாற்போல் தோன்றலாயிற்று.

கண்டிப்பான கடும் விதிமுறைகளை உடைய ஸன்னியா ஸாச்ரமத்திலே ஸமூஹத்தின் நாலைந்து பெர்ஸெண்ட் ஜனங் கள் இருந்தால்கூடத் தாங்காது. அதன் ஒழுக்கம் தளரத்தான் செய்யும். பிற்பாடு அப்படித்தான் ஆயிற்று.

மொத்தத்தில், ஸமூஹ அமைப்பிலே தொழில் முறையில் வர்ணதர்மம் விசேஷமாக பாதிக்கப்படாமலும்; ஸமயத்துறை யில்கூட வைதிகானுஷ்டானங்களும், வைதிக வித்யையும் நலிந் தாலும் ஒரேயடியாய் எடுபட்டுப்போய் அவைதிக ஸம்ப்ர தாயங்கள் கொழுந்துவிட்டு ஓங்காமலும்தான் எப்போதுமே இந்தத் தேசத்தில் பொதுவாக இருந்திருக்கிறது. அறிவாளிகள்

மட்டத்திலும், அரசாங்க ஆதரவாலும் சிற்சில ஸமயங்களில் மட்டும் வைதிகம் சற்று அதிகமாக நலிந்து, அவைதிக மதங்கள் அதிக வலுவோடு இருந்திருக்கின்றன. அப்படிப்பட்ட ஸமயங்களில் ஒரு சங்கரர், ஒரு ஸம்பந்தர் வந்து வைதிகத்தை முன்னைக்காட்டிலும் ப்ரகாசமாகத் தூண்டிவிட்டிருக்கிறார்கள்.

வெள்ளைக்காரச் சரித்ராசிரியர்களிலும் எல்லாரும் பக்ஷபாதிகள் என்று சொல்லக் கூடாது. எங்கேயும் ஸத்யத்தை மதிப்பவர்கள் உண்டு; இப்படித் தனிமனிதர்களிலும் உண்டு; ஸ்தாபனங்களிலும் உண்டு. ஆக்ஸ்ஃபோர்ட் யூனிவர்ஸிடிக்காரர்கள் இருக்கிறார்கள். அவர்கள் எதையும் ஆதார பூர்வமாக, நிஷ்பக்ஷபாதமாக ஆராய்ந்து எடுத்துச் சொல்கிறவர்களென்று பெயர் வாங்கியவர்கள். அவர்கள் ஏதாவது ஒரு விஷயம்பற்றி ஒரு ஸமயம் ஒரு புஸ்தகம் போட்டால் அதை அதோடு தீர்ந்துவிட்டது என்று விட்டுவிட மாட்டார்கள். அப்புறமும் அந்த விஷயத்தை பண்ணிக் கொண்டே இருப்பார்கள். புது ஆராய்ச்சிகளில் பழைய அபிப்ராயத்துக்கு மாறுதலான அபிப்ராயங்கள், கூடுதலான ஸமாசாரங்கள் கிடைத்து இதுதான் ஆதார பூர்வமானது என்று உறுதிப்பட்டால் தயங்காமல் அதை ஏற்றுக்கொண்டு, புஸ்தகத்துக்குப் புது எடிஷன் போட்டோ, அல்லது புதுப் புஸ்தகம் போட்டோ அதிலே இதைத் தெரிவித்துவிடுவார்கள். இம்மாதிரி அவர்கள் இண்டியன் ஹிஸ்டரி போட்டிருக்கிறார்கள்*. அதிலே ரொம்பவும் அழுத்தந்திருத்தமாக,

---

* ஸ்ரீசரணர்கள் குறிப்பிடுவது வின்ஸென்ட் ஸமித் எழுதிய 'The Oxford History of India' என்ற நூலாக இருக்க வேண்டுமென்று சரித்திரப் பேராசிரியரொருவர் தெரிவிக்கிறார். அடுத்து ஸ்ரீசரணர் கூறுவது அந்நூலில் பின்வரும் பகுதியை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும் என்று எடுத்துக் காட்டுகிறார்.

'It must be clearly understood that Brahmanical Hinduism continued to exist and to claim innumerable adherents throughout the ages. It may well be doubted if Buddhism can be correctly described as having been the prevailing religion of India as a whole at any time. The phrase 'Buddhist period' to be found in many books is false and misleading. Neither a Buddhist nor a Jain period ever existed. From time to time Buddhism and Jainism obtained exceptional success and an unusually large percentage of adherents in the population of one kingdom or another, but neither heresy ever superseded Brahmanical Hinduism.'

'ஒவ்வொரு ஸமயத்தில் இந்திய தேசத்தின் அனேக ராஜ்யங் களில் ஒன்றிரண்டில் பௌத்த - ஜைன மதங்கள் அதீதமான செல்வாக்குப் பெற்றிருந்ததுண்டு; அந்த ராஜ்யங்களின் ஜனத் தொகையில் மிகவும் ஏராளமானவர்கள் அம் மதங்களைத் தழுவியதுண்டு. ஆனாலும், எந்த ஒரு ஸமயத்திலேனும் தேசம் முழுதும் பரவிய பெரிய மதமாக அவை இருந்திருக்கிறதாக யாராவது வர்ணித்தால் அது ரொம்பவும் கேலிக்கு உரியதேயாகும். தொன்றுதொட்டு ஒவ்வொரு காலத்திலும் பிராமணர்களின் ஹிந்து மதம் ஜீவித்தே வந்திருக்கிறது, அதைப் பின்பற்றுபவர்களாக ஏராளமான ஜனங்கள் எல்லாக் காலங்களிலுமே இருந்திருக்கிறார்கள் என்பது நிஸ்ஸந் தேஹமாகப் (ஐயத்துக்கு இடமில்லாமல்) புரிந்துகொள்ள வேண்டிய விஷயம். அனேக புஸ்தங்களில் இந்தியாவில் 'பௌத்த காலம்', 'ஜைன காலம்' என்று சில (கால கட்டங் கள்) இருந்ததாகச் சொல்லியிருப்பது தப்பு; அது வேண்டு மென்றே தவறான அபிப்ராயத்தைக் கொடுப்பதாகும். 'பௌத்த காலம்' என்ற ஒன்றோ, 'ஜைன காலம்' என்ற ஒன்றோ இந்தியாவில் இருந்ததே கிடையாது. அவை ஒரொரு ராஜ்யங்களில் ரொம்பவும் கையோங்கினாலும்கூட ஹிந்து மதத்தை அடியோடு பின்னே தள்ளி அதனிடத்தைத் தாங்கள் பிடித்துக் கொண்டதாக ஒரு போதும் நடந்ததில்லை' என்று கண்டிருக்கிறது.

கல்வி விஷயமாகப் பேச ஆரம்பித்துவிட்டு, இதையெல் லாம் ஏன் சொல்லிக் கொண்டிருக்கிறேனென்றால் இதற்கும் அதற்கும் ஸம்பந்தமில்லாமலில்லை. கல்வி என்றால் அது உண்மையைத் தெரிவிப்பதாக அல்லவா இருக்க வேண்டும்? தற்போது நம்முடைய குழந்தைகளுக்குத் தரப்படுகிற கல்வியிலோ உண்மைக்கு மாறாக, நம் தேசத்தில் நாகரிக வாழ்வு உண்டாகிச் சிறிது காலத்திலேயே புத்தரும் ஜினரும் தோன்றி வேத வழிமுறையான வாழ்க்கைப் போக்கை ஒரு கலக்குக் கலக்கி, நெடுங்காலம் தேசத்தில் அவர்களுடைய ஸித்தாந்தங்கள் பலமாகப் பரவியிருக்கும்படிச் செய்தார்கள் என்று ஹிஸ்டரி சொல்லிக் கொடுக்கப்படுகிறது. கல்வி ஸம்பந்தமாகப் பேசும்போது இந்தப் பெரிய கோளாறைச் சொல்லத்தானே வேண்டும்? பெரிசாக யுனிவர்ஸிடி,

டெக்ஸ்ட்-புக் கமிட்டி, அது இது என்று வைத்துவிட்டதால் உண்மையான கல்வி போதிக்கப்படுவதாக அர்த்தமில்லை என்று எடுத்துக்காட்டுவதுடன் குரு-சிஷ்யர்கள் என்ற தனி மனிதர்களின் ஹ்ருதய சுத்தி, வாழ்க்கைத் தூய்மை ஆகியவற்றை மையமாகக் கொண்டே நடந்த குருகுலக் கல்வியின் சிறப்பை ஒருவிதத்தில் அண்டர்-லைன் பண்ணிக் காட்டுகிறது.

ஹிந்து தர்மத்தை ஆசார்யாளோ, ஞானஸம்பந்தரோ புனருத்தாரணம் பண்ணினார்கள் என்பதற்குக்கூட என்ன அர்த்த மென்றால், அவர்கள் காலத்தில் தேசத்தின் ஒவ்வொரு பகுதி களில் ஜன ஸமூஹத்திலேயே ஹிந்து தர்மம் அடியோடு மங்கி, புறச்சமயம் ஒரேயடியாக மேலோங்கியிருந்ததை அவர்கள் மாற்றினார்கள்; அதைவிடக் குறிப்பாக, வித்வத் ஸமூஹத்தில் ஹிந்து மத ஸித்தாந்தத்தை நிலை நாட்டினார்கள் என்பது தான். தேசம் முழுவதிலும் ஹிந்து தர்மத்துக்கு முக்யமாயுள்ள ஸமூஹ அம்சமாகிய (Sociological aspect ஆன) ஜாதித் தொழில் முறை எடுபட்டுப் போனதாகவோ, அப்புறம் அதை நம்முடைய மத புருஷர்களில் ஒருவர் பழையபடி அமல் படுத்தினாரென்றோ நினைக்க இடமில்லை! (சக்ரவர்த்தியின் ஸஹாயமில்லாமல் ஒரு ஸமயத் தலைவர் தாமே இம்மாதிரி ஒரு பெரிய ஸமூஹ மாற்றத்தை உண்டுபண்ணுவதற்குக் கொஞ்சமும் இடமில்லை!)

ஆசார்யாளின் ஒரு பெருமை, யாராலும் ஸாதிக்க முடியாததை அவர் செய்தவரென்றாலும் தம்மைப்பற்றிய தற்பெருமை கொஞ்சங்கூட இல்லாமலிருந்ததுதான். அதனால் தான் அவர் இத்தனை பாஷ்ய க்ரந்தங்களும், ப்ரகரண க்ரந்தங் களும், ஸ்தோத்ரங்களும்* செய்திருந்தும் அவற்றில் எதிலும் தம்மைப்பற்றிய குறிப்பு எதுவுமே கொடுக்கவில்லை. இதனா லேயே அவருடைய கால நிர்ணயம் முதலான பல விஷயங் களைப் பற்றி இன்னமும் பல தினுஸான அபிப்ராயங்கள் இருந்து வருகின்றன. இப்படிப்பட்ட ஆசார்யாளே ஒரே ஒரு இடத்தில் சொல்வதிலிருந்து அவருடைய காலத்தில் இந்தத்

---

* முன்பே இருந்த நூல்களுக்கு இயற்றிய விரிவுரை பாஷ்யம்; சொந்தமாகச் செய்த தத்வ நூல் ப்ரகரணம்; தெய்வபரமாகச் செய்த துதி ஸ்தோத்ரம்.

தேசம் முழுவதற்கும் ஆக்ஞை செய்து கட்டுப்படுத்தக் கூடிய ஸார்வபௌமன் (சக்ரவர்த்தி) எவனும் இல்லை என்பது நிச்சயமாகத் தெரிகிறது. பிரம்ம ஸூத்ரத்தில்● ஓரிடத்தில் தேவர்களைப் பற்றி வருகிறது. இதற்கு ஆசார்யாள் பாஷ்யம் பண்ணும்போது நிஜமாகவே தேவர்களிருப்பதையும் அவர்களோடு மனுஷ்யர்கள் நேருக்கு நேர் தொடர்பு கொண்டிருந்ததையும் சொல்லிவிட்டு, 'இப்போது நம்மில் எவருக்கும் தேவதைகளோடு உறவாடுகிற சக்தி இல்லாதபோது பூர்வ காலத்தில் மட்டும் எப்படி மனுஷ்யர்கள் இவ்வாறு செய்திருக்க முடியும் என்று கேள்வி கேட்டால் அது ஸரியில்லை. இப்படிக் கேட்பவன் தற்காலத்தில் (அதாவது ஆசார்யாள் ஜீவ்யவந்தராக இருந்த காலத்தில்) நம் தேசத்தில் ஸார்வபௌமன் இல்லாததால் எப்போதுமே இப்படிப்பட்ட சக்ரவர்த்திகள் இருந்ததில்லை; இப்போது இங்கே வர்ணாச்ரமங்கள் வ்யவஸ்தை கெட்டிருப்பதால் எப்போதுமே இங்கே வர்ணாச்ரம ஒழுங்கு இருந்ததில்லை என்றெல்லாங்கூட விதண்டாவாதம் பண்ணலாம்' என்கிறார். இதிலிருந்து என்ன தெரிகிறதென்றால், சக்ரவர்த்தி ஒருத்தன் சட்டம் போட்டு தேசம் பூராவும் ஜாதித் தொழில் முறையை மறுபடி உண்டாக்க முடியும் என்றே வைத்துக்கொண்டாலுங்கூட (வாஸ்தவத்தில் இது நடக்கக் கூடியதே அல்ல; நடப்பதாக 'ஹைபோதெடிக'லாக வைத்துக் கொண்டாலுங்கூட) ஆசார்யாள் காலத்தில் அப்படிப்பட்ட சக்ரவர்த்தி எவனும் இருக்கவில்லை. அதனால், வர்ணதர்மம் அவருக்குப் பின் பழைய ஜீவனோடு ப்ரகாசிக்க ஆரம்பித்தது என்றால் அவர் காலத்திலுங்கூட அது அடியோடு எடுபட்டுப் போயிருக்கவில்லை என்றே ஆகிறது!

ஸார்வபௌமன் இல்லை என்று ஆசார்யாள் சொல்லியிருப்பது சற்று முன்னாடி நான் சொன்ன ஒரு விஷயத்தை உறுதிப்படுத்துவதாக இருக்கிறது. பௌத்த – சமண அஹிம்ஸா மதங்களில் ராஜாக்கள் அதிகப் பற்று வைத்திருந்த காலங்களில் சீரும் சிறப்பும் பொருந்திய மஹா ஸாம்ராஜ்யமாக நம் தேசத்தில் எதுவும் நிற்க முடியவில்லை என்றும், நாகரிகம் குறைந்த அன்னிய தேசத்தினரின் ஆளுகைக்கு அச்சமயங்களில்தான் தேசம் அதிகமாக ஆளாயிற்று என்றும்

● முதல் அத்யாயம், மூன்றாம் பாதம், முப்பத்து மூன்றாவது ஸூத்ரம்.

சொன்னேனே, அந்த விஷயந்தான். ஆசார்யாள் இப்படிப் பட்ட ஒரு காலத்தில் அவதாரம் பண்ணிய்வர்தான். அதனால் அவர் காலத்தில் ஸாம்ராஜ்யாதிபதியான ஸார்வபௌமன் எவனும் இல்லை. இந்த விஷயம் இருக்கட்டும். ஸாம்ராஜ்யம் இல்லாவிட்டாலும் அப்போதுங்கூட வர்ணதர்மம் ஒரேயடி யாய் இல்லாமல் போய்விடவில்லை என்ற விஷயத்தில் இருந்தோம்.

'பின்னே நீங்கள்தானே சொன்னீர்கள்! நீங்கள்கூட இல்லை; ஆசார்யாளே சொன்னதாக நீங்கள் இப்போது எடுத்துக்காட் டினீர்களே! அவர் வார்த்தைப்படியே அவர் காலத்தில் ஸார்வபௌமன் இல்லை என்று சொன்னவுடனேயே, அவர் காலத்தில் வர்ணாச்ரமம் வ்யவஸ்தை கெட்டிருந்ததாயும் சொல்லியிருக்கிறாரென்று காட்டினீர்களே! இப்போதோ அது அடியோடு எடுபட்டுப் போய்விடவில்லை என்று மாறுபாடாகச் சொல்கிறீர்களே!' என்று கேட்கலாம்.

பதில் என்னவென்றால், (வர்ணதர்மம்) அடியோடு எடுபட்டுப் போகவுமில்லை; பூரண ரூபத்தில் ப்ரகாசிக்கவும் இல்லை. ஆசார்யாளே என்ன சொல்லியிருக்கிறாரென்றால் அவர் காலத்தில் ஜாதிப் பாகுபாடுகள் 'அவ்யவஸ்தித ப்ராயமாக' இருந்தன என்ற வார்த்தையைத்தான் போட்டிருக் கிறார். இப்படியென்றால் அடியோடு அழிந்து போய்விட்டது என்று அர்த்தமில்லை. 'வ்யவஸ்தை' என்பதாக அதற்கென்று ஏற்பட்டிருந்த வரையறை நலிந்ததாக இருந்தது என்றுதான் அர்த்தம். Irregular-ஆக (ஒழுங்கில்லாமல்) இருந்தது என்கிறாரே தவிர, இல்லாமலே போய்விட்டது என்று சொல்ல வில்லை. சற்றுமுன் நான் intact-ஆக இருந்தது என்றது வேண்டு மானால் அவ்வளவு ஸரியில்லை. 'intact' என்று சொல்லும் படியாக அவ்வளவு கட்டுக்கோப்பாகவுமில்லை; அடியோடு போச்சு என்னும்படியான liquidate-ஆன நிலைக்கும் போய் விடவில்லை. எப்படியிருந்தது என்றால், பிராமணன் பக்ஷபாத மாகப் பண்ணியிருக்கிறான் என்று ஜனங்களுக்குக் கலைத்துக் கொடுத்ததால், ஒருவேளை அந்தக் காலத்துப் பிராமணனும் இப்படிக் குற்றம் சாட்டுவதற்கு இடம் கொடுக்கிற மாதிரி இருந்திருக்கக் கூடுமாதலால், அவனுடைய செல்வாக்கு குன்றிப் போயிருந்தது. அவனால் நடந்த யாக யஜ்ஞாதிகளும்

தர்மோபதேசமும் ஹீனமடைந்தன. ஸமூஹத்துக்கே ஆத்ம பலம் தரும் இந்த அம்சம் ஹீனமான போதிலும், லௌகிக வாழ்க்கை ஒழுங்காக நடப்பதற்கே பாரம்பர்யமாக ஜாதித் தொழில்களைச் செய்வதுதான் வசதியாயிருக்கிறது என்பதால் ஜனங்கள் பழைய முறைப்படியே பிறப்புப் பிரகாரம் அவர வருக்கேற்பட்ட தொழில்களை செய்து வந்தார்கள். அவர் களைப் பொறுத்தமட்டில் அவர்களுக்கு ஹிந்துமத வேதாந்தத் தத்வமும் தெரியாது, பௌத்த – ஜைன ஸித்தாந்த வாதங் களும் தெரியாது. அது வரை ஸத் பிராமணர்களின் உத்தமமான வாழ்க்கை லக்ஷ்யத்தைத் தங்களால் முடிந்த அளவில் பின்பற்றிக் கொண்டு அதனாலேயே ஓரளவு ஆத்ம பரிபக்வம் அடைந்து ராமனை, கிருஷ்ணனைக் கும்பிட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்களில் பெரும்பாலோர் இப்போது அந்த 'லீடர்ஷிப்' இல்லாமல், அதனால் ஆத்மார்த்தமான உயர்வுமில்லாமல், ஏதோ தங்களுக்குப் பிடித்த ஸ்வாமியைக் கும்பிடுவதோடு நின்றுவிட்டார்கள். வைதிகமான 'லீடர்ஷிப்' போனவுடன், உக்ரமான, ஆபாஸமான கோரமான, வழிபாட்டு முறைகளைப் பின்பற்றும் காபாலிகர்கள் முதலிய வர்கள் இவர்களை வளைத்துக் கொண்டார்கள். இவர்களில் சேராமல் பரமதங்களுக்கே போய்விட்ட மீதி ஜனங்களும் ராமனையோ, கிருஷ்ணனையோ அல்லது காபாலியையோ காளியையோ கும்பிடுவதற்குப் பதில் புத்தரையோ தீர்த்தங் கரர்களையோ கும்பிட்டார்களே தவிர அவர்களுக்கு அந்த மதக் கோட்பாடுகள் தெரிந்திருந்தன என்று சொல்ல முடியாது!



# பொதுமக்களுக்கு வாழ்க்கை வழிகாட்டிகள்

'பிராமணர்களின் லீடர்ஷிப் மாதிரி, அதனிடத்தில் பௌத்த-ஜைன பிக்ஷுக்களின் லீடர்ஷிப் பொது ஜனங்களுக்கு ஏற்படவில்லையா?' என்று கேட்டால், இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். நான் ஹிந்துமத குருவாகப் பேச வேண்டு மென்பதாலன்றி, நிஷ்பக்ஷபாதமாகப் பார்த்துத்தான் இப்படிச் சொல்கிறேன். பௌத்த – ஜைன மதங்களில் எத்தனையோ பெரியவர்கள், உத்தமமான துறவிகள், அறிவாளிகள், உபகாரிகள், த்யாகிகள் இருந்திருப்பது வாஸ்தவம். (பௌத்த ரான) நாகார்ஜுனரின் 'ஃபிலாஸஃபி'யில் எனக்கே கொஞ்சம் 'அட்மிரேஷன்' உண்டு. இந்தப் பிக்ஷுமார்கள் பிராமணர்களை விடவும் ஏனைய பொது ஜனங்களைக் கிட்டே சேர்த்துக் கொண்டு கலந்து பழகியதும் வாஸ்தவம். இப்படியிருந்தும் மக்களிடையே அவர்களுக்கு 'லீடர்ஷிப்' என்பது ஏற்பட வில்லை!

ஏன்?

'லீடர்ஷிப்' என்றால் என்ன? தாங்கள் போகிற வழியில் மற்றவர்களை நடக்கப் பண்ணுவதுதான் லீடர்ஷிப். 'இவர் களுடைய வாழ்முறையை நாம் 'ஐடியலா'க் கொள்ள வேண்டும்' என்று நினைத்து ஜனங்கள் யாரைப் பின்பற்ற முடியுமோ, அதே ப்ரகாரம் யாரைப் பின்பற்றுகிறார்களோ அவர்கள்தான் லீடர்ஷிப் உள்ளவர்கள். க்ருஹஸ்தாச்ரமத்தில் தன் மாதிரிப் பெண்டாட்டி, பிள்ளைகுட்டிகளுடன் வாழ்க்கை நடத்துபவனைத்தான் பொதுமக்கள் லீடர்களாகக் கொள்ள முடியுமே அன்றி, ஒரே வைராக்யம், ஒரே தபஸ் என்று இருக் கிற பிக்ஷுக்களை எப்படித் தங்களுக்கு வழி காட்டும் லீடர் களாகக் கொள்ள முடியும்? அவர்களிடம் பக்தி, மரியாதை வேண்டுமானால் வைக்கலாம். ஆனால் வாழ்க்கை வழிகாட்டி

களாக அவர்கள் இல்லாதவரை அவர்களுக்கு 'லீடர்ஷிப்' உண்டாக முடியாது. வேத தர்மத்தில் பிராமண ஜாதியை ஐடியலாக வைத்திருந்து இந்த ஜாதிக்காரர்களும் வாழ்க்கை யின் பெரும் பகுதியை க்ருஹஸ்தாச்ரமிகளாகக் கழிக்க வேண்டு மென்று இருந்ததால் இவர்களை மற்ற ஜனங்கள் ஐடியலாகக் கொண்டு பின்பற்ற முடிந்தது; அப்படியே பின்பற்றினார்கள்.

ஜாதி வித்யாஸமில்லாமல் புது மதம் பண்ணிய புத்தரும் ஜினரும் ஏராளமாகப் பிக்ஷுக்களை உண்டாக்கியபோது, ஸன்னியாஸாச்ரமத்தின் தரமே குன்றிப்போக ஆரம்பித்தது. எத்தனையோ பேர் தப்பிப் போவதாகப் பிற்காலத்தில் ஏற்பட்டது. பிக்ஷு என்றாலே பொது ஜனங்களுக்கு அது பரிஹாஸமாகக்கூட ஆகிவிட்டது.

அதாவது க்ருஹஸ்தனைவிடக் கடும்நெறி உடைய பிக்ஷுக் களை முக்கியமாக்கியதால் முதலில் அவர்களுடைய ஸ்தானத் தின் உயர்வினால் லீடர்ஷிப் ஏற்படாமல் போயிற்று; அப்புறம் கடும் நெறி முடியாமல் பிக்ஷுக்களிலேயே பலர் ஒழுங்கு தப்பினபோது, அந்தத் தாழ்ச்சியினால் ஜன ஸமூஹத்தின் கேலிக்கு அவர்கள் ஆளாக நேர்ந்து, 'லீடர்ஷிப்'புக்கு நேரெதிர் திசையில் போகும்படி ஆயிற்று. மஹேந்த்ர பல்லவனின் 'மத்த விலாஸ ப்ரஹஸன'த்தைப் பார்த்தால் போதும்!

நான் காட்டவந்தது என்னவென்றால், பௌத்த-ஜைன மதங்கள் ஏற்பட்ட பிற்பாடுங்கூட, பொது ஜனங்கள் எந்த மதத்தைச் சேர்ந்தவர்கள் என்று தங்களைச் சொல்லிக் கொண் டாலும் குலத்தொழிலை விடவில்லை என்பதுதான்!



# ஆதிசங்கரரின் அரிய ஸாதனை

மத ஸித்தாந்தங்கள் அறிவாளிகளான சில பேருடைய மட்டத்தோடேயே நின்றது – 'பண்டிதருலகம்' என்கிறார்களே, அதோடு நின்றது. முதலில் உதயனர், குமாரிலர் முதலியவர் களும், முடிவாக ஆசார்யாளும் செய்தது என்னவென்றால் அந்தப் பண்டிதருலகில் வாதங்கள் நடத்திப் பௌத்த – ஜைன மதங்களை நிராகரணம் (மறுதலிப்பு) செய்ததுதான்.

இதிலே யாரும் ஸாதிக்க முடியாத அதிசயமாக ஆசார்யாள் என்ன செய்தாரென்றால்,

ஏற்கெனவே தார்க்கிகர்களும் (தர்க்க சாஸ்த்ரக்காரர்களும்) மீமாம்ஸகர்களும் பாதி தூரத்துக்கு மேலே போகப் பண்ணி விட்ட பரமதங்களை அவர் முழுசாக வெளியேற்றி விட்ட தோடு நிற்கவில்லை. தர்க்கமும் மீமாம்ஸையும் வித்வத் ஜனங்க ளோடேயே முடிந்து விடுவது; பொது ஜனங்களின் மதமாக அவை ஒருபோதும் ஆகமுடியாது. ஆசார்யாள் சொன்ன அத்வைதமும் வித்வத் ஜனங்களுக்குத்தான் புரிவது. புரிவதற்கு மேல் அதன் உண்மை உத்தேசமான அனுபவம் என்பதோ லக்ஷத்தில், கோடியில் ஒருத்தருக்குத்தான் ஸித்திக்கக் கூடியது. இப்படிப்பட்ட ரொம்பவும் 'அப்ஸ்ட்ரூஸான' ஸித்தாந்தத்தை நிர்த்தாரணம் பண்ணிய அதே ஆசார்யாள்தான், பரமதங் களை நிராகரணம் செய்தபின், அத்தனை பொது ஜனங் களுக்கும் – வித்வத் ஜனங்களுக்கு மட்டுமில்லை; பாமர ஜனங்கள் உள்பட ஜீவ ஸமூஹம் முழுவதற்கும் – ஆபாஸமும் கோரமுமில்லாத வழிபாட்டு முறைகளைத் தந்து பரமோப காரம் செய்தார். வைதிகக் கர்மானுஷ்டானங்களைப் பழையபடி ப்ரகாசிக்கச் செய்து மறுபடியும் ஸத்பிராமணர்கள் விருத்தியடையச் செய்து அவர்களுடைய 'லீடர்ஷிப்'பில் மற்ற வர்களும் முன்னேறச் செய்தார்.

லீடர்ஷிப் என்றால் அவர்கள் ஊர்வலத்தில் முன்னே கொடியை எடுத்துக் கொண்டு போய் மேடையில் ப்ரஸங்கம் செய்து மாலை-பொன்னாடை மரியாதை பெறவில்லை. ஸைலன்ட் லீடர்ஷிப்தான்-மௌனமான தலைமைதான். அவர்கள் பாட்டுக்கு ஒதுங்கித் தியாகமாக, நியமமாக, அஹிம்ஸை, அபயம், பக்தி, அன்பு, அபரிக்ரஹம் (பொருள் பற்றின்மை) முதலியவற்றோடு வாழ்ந்து கொண்டிருந்தார்கள். அதிலிருந்து மற்ற ஜனங்கள் தாங்களாகவே முன்னுதாரணம் எடுத்துக் கொண்டதைத்தான் 'லீடர்ஷிப்' என்கிறேன்.

இந்த லீடர்ஷிப்பில் ஜனஸமுதாயம் முழுவதற்கும் பொருள் தருவது எதுவோ, உய்வு தருவது எதுவோ அந்த ஆத்மா பிவ்ருத்தியும் ஏற்படும்படியாக ஆசார்யர்கள்தான் மறுபடி ஏற்படுத்தினார். அதாவது இந்தியா என்றால் தர்மம், பக்தி, ஆத்மஸம்பத்து என்று இதற்கு உயிர் மூச்சாக உள்ள ஆக்ஸிஜனை மறுபடி கொடுத்து இதைப் பிழைக்க வைத்தவர் அவர்தான். ஆரம்பத்திலிருந்து நான் சொன்னதுபோல 'ஆசார்யர்' என்ற பெயர் தமக்கே அலாதியாகப் பொருந்தும்படியாக, அதன் லக்ஷணப்படி புத்தியை மட்டும் வளர்க்காமல், ஒழுக்கத்தையும், ஹ்ருதயத்தையும், ஆத்மாவையுமே வளர்க்கும்படியான நிஜமான பாடத்தை தேசம் பூராவுக்கும் – லோகம் பூராவுக்குமே சொல்லிக் கொடுத்தார்.

தேசம் முழுவதும் ஸஞ்சாரம் பண்ணி ஆங்காங்கே அறிவாளிகளான மற்ற ஸித்தாந்திகளை அவர் ஜயித்தவுடனேயே அந்த ஸித்தாந்தங்கள் தோற்று ஓட்டம் பிடித்தன. ஆனால் இதனால் மட்டும் வைதிக ஹிந்து மதம் ஜயித்ததாக ஆகாது. ஏனென்றால் வாதத்தால் பெற்ற வெற்றி புத்தியின் ஜயம்தான். ஜன ஸமூஹத்தின் ஒழுக்கம், பக்தி இவற்றுக்கோ, அவர்களில் பக்வமானவர்களுக்கு ஆத்மானுபவம் ஏற்படுவதற்கோ பரமதங்களின் நிராகரணம் மட்டும் எப்படிப் போதும்? ஆசார்யாளின் அஸாத்ய ஸாதனை என்னவென்றால் இதற்கெல்லாம் வழியாக நான் இப்போது சொன்னபடி தர்மத்தையும் பக்தியையும் அத்வைத ஞானத்தோடேயே அவர் நிலைநாட்டி, பரமதங்களின் அபஜயத்தை அதோடு விடாமல் நேராக வைதிகமதத்தின் வெற்றியாகப் பூர்த்தி செய்து கொடுத்ததுதான்!

கர்மா, பக்தி, ஞானம் என்ற மூன்று மார்க்கங்களில் நம் ஆசார்யாள் ஞானத்தை நிலைநாட்டினவர் என்று பொதுவாகச் சொல்லப்பட்டாலும், அது நிஜந்தான் என்றாலும், கர்மாவையும் பக்தியையும்கூட அவர்தான் புத்துயிர் தந்து ஸ்திரப்படுத்தியிருக்கிறார். கர்மமும் தர்மமும் ஒன்றோடொன்று ஒட்டியவை; கைகோத்துக் கொண்டு போகிறவை. வேத சாஸ்த்ர ப்ரகாரம் ஒவ்வொருவனுக்கும் ஏற்பட்ட குல‘கர்மாவைப் பொறுத்தே அவனது நியாயமான வாழ்க்கை முறையாகிய தர்மம் என்பதும் அமைந்திருக்கிறது. குல‘தர்மம், ஸ்வதர்மம் என்ற வார்த்தைகள் குலகர்மம்', பிறப்பால் ஏற்பட்ட ஸ்வகர்மம் என்ற அர்த்தத்திலேயே கீதாதி சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. இப்படி சாஸ்த்ரம் விதித்த கர்மாவைச் செய்து அதனால் சித்த சுத்தி பெற்று, சுத்தி பெற்ற அந்தச் சித்தத்தால் ஈச்வரனை ஒருமுனைப்பாட்டோடு நினைத்து, அதாவது பக்தி பண்ணி, அப்புறம்தான் அந்த நினைப்பிலேயே தோய்ந்து முடிவாக நினைப்பு என்பதே அழிந்து ஈச்வரனோடு ஈச்வரனாக அத்வைத ஞானம் பெறும்படியாக ஆசார்யாள் க்ரமப்படுத்திக் கொடுத்திருக்கிறார்.

இவற்றில் அவரவரது கர்மத்தை, தர்மத்தைச் சொல்வது தர்ம சாஸ்த்ரமான ஸ்ம்ருதி. பக்தியை ஊட்டி வளர்ப்பது புராணம். அத்வைத ஞானத்துக்கு உபாயம் சொல்வது உபநிஷத்தாகிய வேத அந்தம் (வேதாந்தம்) எனும் ச்ருதி சிரஸ். ச்ருதியின் அடியில் (பாதத்திலிருந்து) ஆரம்பித்துத்தான் இந்த சிரஸான முடிவுக்கு (முடிக்கு)ப் போக வேண்டும். இம் மூன்றுக்குமே – அதாவது ஞானத்துக்கான ச்ருதி, கர்மாவுக்கான ஸ்ம்ருதி, பக்திக்கான புராணம் ஆகிய மூன்றுக்குமே – ஆசார்யாள் ஒரு குடியிருப்பாக இருந்தார்; இவை மூன்றும் குடிகொண்ட கோயிலாக இருந்தார் என்றே அவரைப் பற்றிய ச்லோகம் சொல்கிறது;

*ச்ருதி ஸ்ம்ருதி புராணாநாம் ஆலயம் கருணாலயம் ।*
*நமாமி பகவத்பாத சங்கரம் லோக சங்கரம் ॥*

அதாவது பரமபாவிகளான சிலருக்கு மட்டும் நல்லது பண்ணும் ஞானாசார்யராக மட்டுமில்லாமல் ஸகல ஜனங்களுக்கும் நல்லது பண்ணும் கர்ம – பக்திகளையும் தரும் லோக

சம்-கரராக இருந்த அருள்மூர்த்தி (கருணாலயம்) அவர் என்று ச்லோகம் சொல்கிறது. ('சம்' என்றால் நல்லது. 'கர' என்றால் பண்ணுவது. உலகத்துக்கெல்லாம் நல்லது பண்ணிய லோக சம்-கரர் நம்முடைய சங்கர பகவத் பாதாள்.)

அறிவு வாதத்தால் தாய் மதத்துக்குத் திருப்பிய பிராமணர் களை, நம் பழைய கல்விமுறையில் அறிவை அனுஷ்டானத் தோடு இணைத்தது போலவே ஆசார்யாளும் கர்மானுஷ் டானங்களில் கட்டிப் போட்டார். அதனால் அவர்கள் தாங் களும் சித்த சுத்தி பெற்று, ஸமூஹம் முழுவதற்கும் 'ஐடியல்' வாழ்க்கை வாழ்ந்து காட்டும்படியும் செய்தார்.

ஓர் ஊருக்குப் போனால் வாதப் போர் செய்வது மட்டுமல் லாமல் அங்கே கோயிலுக்குப் புனர்ஜீவன் உண்டாக்கினார்; யந்த்ர ப்ரதிஷ்டை பண்ணினார்; உக்ர மூர்த்தியை ஸெளம்ய மாக்கினார்.

ஆசார்யாள் என்றாலே 'அத்வைதம், அத்வைதம்' என்று கொண்டாடுவது அவரைப் பூர்ணமாகச் சொல்வதாகாது. அத்வைதந்தான் லக்ஷ்யம், அதை அசைக்க முடியாத ஸித்தாந்த மாக அவர் ஸ்தாபித்துவிட்டாரென்றாலும், அதை நேராக அப்யஸிக்கக் கூடிய அதிகாரிகள் ரொம்பவும் ஸ்வல்பமே. எல்லா ஜனங்களுக்கும் அவர் செய்த பரமோபகாரம், சித்த சுத்திக்குப் பரம உபாயமான கர்மாவை சாஸ்த்ரப்படி மறுபடி பண்ண வைத்ததும், அன்பு வழியிலேயே அமைந்த ஆலய வழிபாட்டைப் பெரிய அளவில் புத்துயிர் பெறவைத்து பக்தியை வளர்த்ததுந்தான். 'ஷண்மதங்கள்' என்பதாக அவர வரும் இஷ்ட தெய்வ உபாஸனையை ஸெளம்யமான முறை யில் பண்ணவும், அப்படிப் பண்ணும்போதே மற்ற தெய்வங் களை நிந்திக்காமல் அவையும் தங்களுடைய இஷ்ட தெய்வமாகியுள்ள அதே பரமாத்மாவின் வேறு ரூபங்கள்தான் என்ற த்ருஷ்டியுடன் அவற்றையும் 'பஞ்சாயதனம்' என்ற பெயரில் தங்கள் இஷ்டமூர்த்திக்குப் பரிவாரங்களாக வைத்து ஆராதிக்கவும் அவர் ஏற்பாடு செய்து நம் மதத்துக்குள்ளேயே உட்பிணக்குகள் அறுவதற்கு வழி செய்தார்.*

---

*பஞ்சாயதனம், ஷண்மதம் இவை தொடர்பாக அருள் உரை 6-வது புத்தகத்தில் இடம்பெற்றுள்ள 'பூஜை' என்ற உரையைப் பார்க்கவும்.

ஆசார்யர்–உபாத்யாயர் என்று ஆரம்பித்தது எங்கெங்கேயோ போய் ஆசார்யாள் மாஹாத்மியத்தில் கொண்டு விட்டது!

இந்த topic-குக்கு வித்யாஸ்தான விஷயத்தில் எப்படி ஸம்பந்தம் என்று சொல்கிறேன். புறச்சமயத்தினர் பெரிய வித்யாசாலைகள் வைத்து ஸகல ஜாதியினரையும் 'வா வா' என்று கூப்பிட்டபோதிலும் பொது ஜனங்கள் தங்கள் பாரம்பர்யத் தொழிலைத் தொடர்ந்து செய்து கொண்டு போவதில் தான் நாட்டமுள்ளவர்களாக இருந்திருக்கிறார்கள். அதனால், முன்னேயே சொன்னபடி, இவர்களுக்கு வீடே தொழிலைக் கற்பிக்கும் கல்விக்கூடமாகவும் இருந்து, வித்யாசாலைகளின் தேவை தெரியாமலிருந்ததால் இவர்கள் அப்படியொன்றும் குறிப்பிடும்படியாகப் புதுக் கல்வி நிலையங்களில் சேர்ந்து விடவில்லை. ஏதோ ஓரளவு சேர்ந்ததோடு, ஏதோ ஆரம்ப வகுப்புகள் படித்ததோடு ஸரி. வித்யை, தத்வம் இவற்றிலேயே பாரம்பர்யமாக ஈடுபாடு கொண்ட பிராமணரும், அடுத்தபடி க்ஷத்ரியரும்தான் புதிய வித்யாசாலைகளில் நிறையச் சேர்ந்த வர்களும், முழுக் 'கோர்ஸு'ம் படித்தவர்களும். அங்கங்கே புத்தர் பிராமணர்களுடன் வாதம் செய்வது, அவர்கள் அவர் மதத்தில் சேர்ந்து பிக்ஷுவாவது என்றிப்படிக் கதைகளை அவர் சரித்ரத்தில் பார்க்கிறோம். ஆதலால் ப்ராமண்யத்தை எதிர்க் கும் அவர் மதத்துக்கும் அவருடைய மதஸ்தரின் வித்யாசாலை களுக்கும் பெரிய ஆதரவு கிடைத்ததும் பிராமணர் களிடமிருந்துதான். ஸமய தத்வ வாதத்தில் அவர்களுக்குத் தானே அதிக பிடிமானம்? அதனால் (இப்படி).

ஆக, பௌத்த - ஜைனர் செல்வாக்கு ஓங்கியிருந்த காலத்தில்தான் எல்லாருக்கும் பொதுவாகப் பல வாத்யார்கள் சேர்ந்து ஸ்தாபன ரீதியில் கல்வி போதிக்கும் முறை ஏற்பட்டது; அந்தக் காலத்திலும்கூட ஜாதி ஏற்பாடு இருந்து கொண்டேதானிருந்தது – என்று சொல்லிக் கொண்டிருந்தேன்.



# நிகழ்கால – பூர்வகால ஒப்புவமை

இந்த ஜாதி விஷயத்துக்கு எங்கேயோ பூர்வகால சரித்ரத்துக்குப் போய் மூளையைக் குழப்பிக் கொள்ள வேண்டுமென்பதே இல்லை. அந்த அபிமானம் அனாதி காலமாக நம் ரத்தத்திலேயே ஊறிவிட்டிருக்கிறது என்பதற்கு நம்முடைய காலத்தைப் பார்த்தாலே போதும். பௌத்தர்களையும் ஜைனர்களையும்விட இன்னமும் காரஸாரமாகவும் நையாண்டியாகவும் வெள்ளைக்காரர்கள், முக்யமாக அவர்களுடைய மத ப்ரசாரகர்கள், வர்ண தர்மத்தைக் கண்டனம் செய்திருக்கிறார்கள். அவர்களைப் போலவே இவர்களும் ஸ்கூல்கள், காலேஜ்கள் வைத்திருக்கிறார்கள். ஆனால் ஒரு பெரிய வித்யாஸம். பௌத்த - ஜைனர்கள்கூட நல்லறிவு ஏற்பட வேண்டுமானால் வைதிகமான சதுர்தச வித்யைகளைச் சொல்லிக் கொடுக்கத்தான் வேண்டும் என்று உணர்ந்து தங்களுடைய ஸர்வகலாசாலைகளில் அவ்வாறே செய்திருக்கிறார்கள். அவற்றோடு கூடத்தான் தங்கள் ஸித்தாந்தங்களையும் சொல்லிக் கொடுத்தார்கள். அவர்களுடைய கொள்கையால் ஜாதிகள் எடுபட்டுப் போய், ஸமூஹத்துக்கு அவச்யமான ஏதேனும் ஒரு தொழிலுக்கு எவருமே வராவிட்டால், அல்லது போதிய அளவு ஜனங்கள் வராவிட்டால் அதை ஸமாளிப்பதற்கு அவர்களால் 'ஸப்ஸ்டிட்யூட்' எதுவும் கொடுக்க முடிந்திருக்காது. அதனால்தான் போலிருக்கிறது, அந்த மதங்களின் காலத்தில் ஸமூஹத்தின் சீரான வாழ்க்கையை உத்தேசித்துக் குலத் தொழில்கள் தொடர்ந்து நடக்க விட்டிருக்கிறார்கள்.

ஆனால் வெள்ளைக்காரர் காலத்தில் எப்படி ஆயிற்று? வேத வித்யா சாஸ்த்ரங்களை அப்படியே தூக்கி எறிந்தார்கள். அத்தனை ஜனங்களுக்குமே ஸப்ஸ்டிட்யூட்டாக மிஷின்கள், கோல் (நிலக்கரி), ஸ்டீம், எலெக்ட்ரிஸிடி, ந்யூக்ளியர் பவர் (அணுச்சக்தி) என்று ஒன்றன்பின் ஒன்றாக வந்துவிட்டன.

ஜாதிப்படித் தொழில் என்பது ஒரு மாதிரி இல்லாமலே போய் விட்டது. அதோடு ஸாமர்த்யமான பொருளாதார வசியம், த்வேஷ ப்ரசாரம், சரித்ரம் - ஆராய்ச்சி என்ற பெயரில் பரப்பிய ஆர்யன் - த்ராவிடியன் ரேஸ் கொள்கை ஆகியவற் றால், மற்ற எந்தத் தொழில் எப்படியானாலும் ஸப்ஸ்டிட் யூட்டினால் நடத்தவே முடியாத வேத அத்யயன – அத்யாபன ஆயுஸ்காலத் தொழில் ஏறக்குறைய நசித்தே போய்விட்டது. இதில் நம் ஜனங்களே, அதிலும் வேதத் தொழிலுக்குரிய ஜனங் களுமே, நன்றாக ஒத்துழைத்துக் 'கைங்கர்யம்' பண்ணிப் 'புண்யம்' கட்டிக் கொண்டிருக்கிறார்கள். ஆக இப்போது அசட்டு வைதிகக் குடுக்கைகளாக என் மாதிரி எங்கேயோ இருக்கிற நாலு பேரைத் தவிரப் பாக்கி அத்தனை பேருக்கும் ஜாதி என்றாலே மகா கொடுமை, அநாகரிகம் என்பதுதான் அபிப்ராயமாயிருக்கிறது. இப்படி நிஜமாகவே பாரம்பர்யத் தொழிற் பங்கீடு போய்விட்ட பின்பும், அப்படிப் போவது தான் நம் முன்னேற்றத்துக்கு வழி என்று ஸகல ஜனங்களும் அபிப்ராயப்பட்ட போதிலும், இப்போதுங்கூடக் கலப்பு மணம் என்றால் நூற்றுக்குப் பத்துப் பேர்கூடத் துணிந்து முன்வர மாட்டேனென்கிறார்கள். அதாவது இத்தனை கிரிசை கெட்ட நிலையிலும் எங்கேயோ உள்ள ஜாதியபிமானம் இருக்கத்தான் செய்கிறது. எலெக்ஷனென்றால் ஜாதிக்குத்தான் ஓட்டு என்றே இன்னமும் இருக்கிறது! இப்படியிருக்கும்போது ஆலைத் தொழில் என்பது ஏற்படாமல் அந்தந்தக் கிராமமும் அதனதன் கைத் தொழில்களால்தான் நடக்க வேண்டும் என்பதாக 'எகானமி' அமைந்திருந்த பௌத்த - ஜைன காலங் களில் பெயரளவில் மாத்திரமில்லாமல் தொழில் அடிப்படை யிலேயே ஜாதிகள் தொடர்ந்து இருந்து வந்ததில் ஆச்சர்ய மில்லை அல்லவா?

இன்னொரு விஷயத்திலும் நிகழ்காலத்தை வைத்தே பழங் காலத்தில் எப்படியிருந்திருக்குமென்று ஊஹித்துக் கொள்ள லாம். இப்போது வெள்ளைக்காரக் கல்வி முறை வந்து ரொம்ப வருஷங்களுக்கு அதில் அதிகமாக ப்ரவேசித்துத் தேர்ச்சி பெற்றுவந்தது யார்? பிராமணர்கள்தானே? இவர்களே எல்லா உத்யோகத்துக்கும் வந்து விடுகிறார்களே என்பதற்காக எதிர்ப்பு இயக்கமே ஆரம்பித்து மற்றவர்களை உசுப்பிவிடும்

வரையில் வியாபாரிகளாகவும் தொழிலாளிகளாகவும் இருந்த இதர ஜனங்கள் அதில் விசேஷமாகப் போய் விழவில்லை யல்லவா? அவர்கள் பாட்டுக்கு 'நமக்கென்று குலத்தொழில் இருக்கிறது; வயிற்றைக் கழுவிக்கொள்ள அது போதும்' என்று தானே இருந்துவந்தார்கள்? அறிவு வேலையிலேயே ஈடுபட்ட பிராமணன்தான் புதிதாக ஸயன்ஸ், ஆர்ட்ஸ் என்று கல்விமுறை வந்தபோது அதிலே போய்ச் சேர்ந்தான். ராஜாக்கள் போய்; அதனால் பிராமணனுக்கு ராஜமான்யம் என்பது போய்; பிராமணனுக்கும் தெய்வ பலத்தில் நம்பிக்கையும் உயிரைக் கொடுத்தாவது ஸ்வதர்மத்தை ரக்ஷிக்கும் தீரம், த்யாக சித்தம் முதலானதுகளும் போய்; அந்த ஸமயத்தில் 'படிப்பை வைத்து உத்யோகம் தருகிறேன்' என்று வெள்ளைக்காரன் தந்திரமாகச் சபலம் காட்டியதால் இவன்தான் வெள்ளைக்காரப் படிப்பு முறைக்கு முதல் அடிமையானான். 'பிராமண ஆதிக்கம்' என்ற கற்பனையான ஒன்றை ஸ்ருஷ்டித்து, அதை அழிப்பதாகச் சொல்லிக் கொண்டு ஹிந்து மதத்தையே பலஹீனப்படுத்து வதற்காக வெள்ளைக்காரன் கொண்டுவந்த ஸ்கூலிலும் காலேஜிலும் அந்த பிராமணனேதான் பெருவாரியாகச் சேர்ந்து, இன்னொருவிதத்தில் பிராமண ஆதிக்கத்துக்குக் காரணமாகி, இதனால் ஜஸ்டிஸ் பார்ட்டி, கழகம் என்றெல் லாம் எதிர்ப்புகள் ஏற்பட்டு ஹிந்து ஸமுதாயம் ஒற்றுமை குன்றிப் பலஹீனமடைந்திருக்கிறது. இது வெள்ளைக்காரன் 'ப்ளான்' பண்ணினதுதான். இதை வைத்தே ஆதியில் பரமதஸ் தர்கள் வர்ண விபாகப்படி இல்லாமல் எல்லாருக்கும் கல்விச் சாலைகள் என்று ஆரம்பித்தபோது நடந்ததையும் ஊஹிக் கலாம்.

இப்போது போல் அப்போது, 'குலத்தொழில் பண்ணா விட்டாலும் ஸமூஹத்துக்குப் பாதிப்பு ஏற்படாமல் மெஷின் களால், ஆலைத் தொழிலால் சமாளித்து விடலாம்' என்று இருந்திருக்க முடியாது; ஆனபடியால் இப்போதைவிட அப்போதைய தொழிலாளி வர்க்கங்கள் அந்தக் கல்விச்சாலை களில் சேராமல் தங்கள் ஜாதித் தொழிலைப் பார்த்துக் கொண் டிருந்ததாகத்தான் நடந்திருக்கிறது. பிராமணன் குறிப்பாக இன்ட்ரஸ்ட் காட்டிய சாஸ்த்ரங்கள், தத்வ விசார நூல்கள், காவ்யம், ஜ்யோதிஷம் முதலியன அப்போது நாளுக்கு நாள் வ்ருத்தியானாற்போல், க்ஷத்ரியனுக்குப் புதுப்புது போர் முறை

களோ, இன்றைக்கு பாம்(ப்), நாளைக்கு ஸப்மெரின், மறுநாள் 'ந்யூக்ளியர் வெபன்' என்பதாகவோ தனுர்வேத சாஸ்த்ரம் பெருத்துக்கொண்டே போகவில்லை. இப்படியே வியாபார சாஸ்த்ரங்களான பி.காம்., பிஸினெஸ் மானேஜ்மெண்ட், ஸீ.ஏ. என்றெல்லாமும் தினம் தினம் மூன்றாம் வர்ணத்தாருக்கான படிப்புகள் ஏற்படவில்லை. ஆலைத்தொழில் இல்லாததால் நாலாம் வர்ணத்தாருக்குப் பயன்படும்படியான இன்டஸ்ட்ரி யல் ட்ரெயினிங் ஸ்கூல், பாலிடெக்னிக் முதலானதுகளும் ஏற்பட வேண்டிய அவசியமில்லாமல், தங்கள் குல முன்னோர் களுடன் உழைக்கும்போதே வேலையும் கற்றுக் கொண்டுவிடும் முறையேதான் பெரும்பாலும் நீடித்தது. ஆனபடியால், புதியதாக வித்யாசாலைகள் பெரிசாக ஏற்பட்டபோதுகூட பிராமண இதரர்கள் அவற்றில் கூட்டங் கூட்டமாகச் சேரும்படி அவர்களை அதிகமாக இழுக்கவில்லை. நம் தொழிலுக்கு அதிகப் பிரயோஜனமில்லாத படிப்புக்குப் போய், அதனால் ஜீவன வ்ருத்தி பாழாய்விடப் போகிறதே என்றேதான் அவர் களில் பெரும்பாலானோர் இருந்திருக்கிறார்கள். அந்த ஜாதி களிலும் வசதியுள்ளவர்கள், சம்பாதிக்க வேண்டிய நிர்ப்பந்த மின்றி ஸொத்தை வைத்தே சாப்பிடக் கூடியவர்கள், அல்லது எத்தனை கஷ்டமானாலும் வித்யையை ஸம்பாதித்துக் கொள்ள வேண்டும் என்ற அறிவுப் பசியும், லோக வாழ்க்கை எப்படிப் போனாலும் நித்ய ஸத்யத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆத்ம தாஹமும் கொண்டவர்கள் ஆகியோர் மட்டுமே இந்தப் பெரிய வித்யாசாலைகளில் சேர்ந்தார்கள். இப்படியும் சில பேர் இருந்திருக்கிறார்கள் – அப்பர் ஸ்வாமிகள் நாலாம் வர்ணத்தவர்தான், சமணப் பள்ளியில் படித்து உயர்ந்த தேர்ச்சி அடையவில்லையா? இருந் தாலும் 'பெர்ஸென்டேஜ்' பார்த்தால் மற்றவர்கள் (அப்பிராமணர்) வித்யாசாலைக்குப் போனது ரொம்பக் குறைச்சல்தான். பிராமணனுக்கு அடுத்தபடியாக க்ஷத்ரியர்கள் ஓரளவுக்குப் பெருவாரியாகப் படித்தார்கள். அப்புறம் வைச் யர்கள், நாலாம் வர்ணத்தார் என்று போயிற்று.

அதனால், மெகாலே கல்வித்திட்டம் என்பதாக நம் பாரத ஸமய-கலாசாரங்களின் வேரை நாமறியாமலேயே நைஸாக அரிபட்டுப் போகும்படிச் செய்த படிப்புமுறை சென்ற நூற் றாண்டிலே வந்ததும், அதில் பெருவாரியாக பிராமணப்

பசங்களே போய்விழுந்த மாதிரிதான் பௌத்த-ஜைனாள் பள்ளிகள் ஆரம்பித்தபோதும் நடந்திருக்கிறது. இப்போது போலவே (இந்த அளவுக்கு மோசமாயில்லாவிட்டாலும்) அப்போதும் பிராமணர்களின் ஸ்வதர்மம்தான் அதிகம் கெட்டிருந்தது. இல்லாவிட்டால் மற்ற மதங்கள் எப்படி வேர் பிடித்திருக்க முடியும்? அஹிம்ஸை என்று சொல்லி அந்த மதங்கள் முக்கியமாக பிராமணனின் சாஸ்த்ரியக் கடமையான (அதாவது தொழிலான) யாகத்தைத்தானே கண்டனம் செய்தன? **'சங்கர விஜயம்'** முதலான நூல்களில் தேவர்கள் ஈச்வரனிடம் போய் 'யஜ்ஞானுஷ்டானம் க்ஷீணித்துவிட்டதே!' என்று முறையிட்டதாகத்தான் பார்க்கிறோம். அதனால் பிராமணன்தான் அக்காலத்தில் தன்னுடைய பாரம்பரியத் தொழிலால் ஜீவனோபாயம் பெறுவதென்பது பாதிப்படைந்த போது, அந்த மதங்களில் கொஞ்சம் அதிகமாகவே சேர்ந்து பிக்ஷுவானது. அவர்கள்தான் புதுசாக ஏற்பட்ட அந்த வித்யா சாலைகளிலும் அதிக அளவில் சேர்ந்தார்கள். வயிற்றை உத்தேசித்தே போனார்கள் என்பது முழு உண்மை அல்ல. நிஜமான (genuine ஆன) தத்வ நாட்டம், வித்யையில் ஈடுபாடு இவற்றுக்காகவும் பலபேர் போயிருப்பார்கள். ஏனென்றால், ஸ்வதர்மத்தோடு வரும் கர்மானுஷ்டானங்களாலும் காயத்ரீ உபாஸன்யாலும் பிராமணப் பசங்கள் தாங்களாகவே ஸம்பாதித்துக் கொள்ளும் சித்தசுத்தியும், அதன் ஓர் அம்சமாக உண்டாகும் புத்தி ப்ரகாசமும் அப்போது பாதிக்கப்பட்டிருந்தாலும், பாரம்பர்யம் என்று ரத்தத்திலேயே சில திறமைகள், சில குணங்கள் உண்டாகிவிடுகின்றன. ரொம்பத் தலைமுறைகள் தள்ளிப் போனால்தான் இவை அடியோடு தேய்ந்துவிடும். (நமக்கு அடுத்த தலைமுறையில் இப்படி ஏற்பட விடப்படாதே என்பதுதான் என் பெரிய விசாரம்.) அந்த ஸ்திதி ஏற்படும் வரை பெடல் பண்ணிவிட்ட சைக்கிளைப்போல, இவர்கள் புதுசாக அனுஷ்டானம் பண்ணிப் பெடலைச் சுழற்றாவிட்டாலும், ஏற்கெனவே உந்திவிட்ட வேகமே ஓட்டிக்கொண்டு போவதுபோல் பூர்விகர்களால் ஏற்பட்ட பாரம்பரிய பலம் மேலே கொஞ்சம் ஓட்டிக்கொண்டு போய்விடும். இந்தப் பாரம்பரிய புத்தி ப்ரகாசப் பெடல் – force பரமதங்கள் வ்ருத்தியான ஸமயத்திலும் பிராமணனுக்குக் கைகொடுத்தது. (History repeats itself – சரித்ரம் திரும்பத் திரும்ப அப்படியே நடக்கிறது

என்கிறபடி இதையெல்லாந்தான் இங்கிலீஷ் படிப்புமுறை வந்த போதும் ப்ரத்யக்ஷமாகப் பார்த்தோம்.) ஆனபடியால் பிராமண ஜாதியினருக்கே புதிதாக வந்துள்ள மத சித்தாந்தங் களை அறிய வேண்டும் என்ற ருசி அதிகம் இருந்தது.

அதோடு பௌத்தத்தை அசோகன் காலத்திலிருந்தே வெளி தேசங்களுக்கும் பரப்புவது என்று வைத்துக் கொண்டதில் கிரீஸ், சீனா முதலான புராதன நாகரிகங்களை உடையவர் களில் அறிவாளிகளுடன் நமக்குப் பரிச்சயம் அதிகமானதும் அறிவு நாட்டம் கொண்ட பிராமணனுக்கு இன்ஸென்டிவ் ஆயிற்று. வெளி தேசங்களிலிருந்து ஜ்யோதிஷம் முதலான சாஸ்த்ரங்களில் நமக்குத் தெரியாமல் அவர்கள் தெரிந்து கொண்டிருந்த விஷயங்களை நாமும் கற்றறிய வேண்டும்; அவர்களுக்குத் தெரியாத நம்முடைய க்ஷேத்ர கணிதமுறை (geometry), ரணசிகித்ஸை முறை (சுச்ருத சாஸ்த்ரமான surgery), முதலியவற்றை அவர்களுக்குக் கற்றுக் கொடுக்க வேண்டும் என்றெல்லாம் ஏற்பட்டதால் புதிய பெரிய வித்யாசாலைகளில் பிராமணர்கள் சேர்வதற்கு மேலும் மேலும் ஊக்கம் ஜாஸ்தி ஆயிற்று. ஏனென்றால், இவற்றிலே நம் தேசத்தின் எல்லா ஜாதிக்காரர்களும் சேர்ந்து படித்தது மட்டுமில்லாமல், வெளி தேசத்துக்காரர்களும் நம் உபாத்யாயர்களிடம் மாணாக்கர் களாகப் படித்திருக்கிறார்கள். அதே மாதிரி வெளி தேசத்து உபாத்தியாயர்களும் இவற்றில் பாடம் நடத்தி அவர்களிடம் நம்மவர்கள் மாணாக்கர்களாகப் படித்திருக்கிறார்கள். ஆனா லும் நம் நாட்டவர்களில் பிராமணர்களே அதிமாகவும், அப்புறம் அதைவிடக் குறைச்சல், மேலும் குறைச்சல் என்ற ரீதியில் க்ஷத்ரிய – வைச்ய – சூத்ரர்களும் இவற்றில் சேர்ந் திருக்கிறார்கள்.



# பௌத்த – ஜைனர் கல்விச் சிறப்பு

**ஸ**மய ஸித்தாந்தம், தத்வவாதம், மதமாற்று யுக்திகள், 'அஹிம்ஸை' என்று வானளாவச் சொல்லிக் கொண்டே மாற்று மதக்காரரை உப்பரிகையிலிருந்து உருட்டித் தள்ளுவது*, அவர் களுடைய மடாலயத்துக்கு நெருப்பு வைப்பது★ ஆகியவை யெல்லாம் எப்படியோ போகட்டும். கல்வி, அறிவாற்றல், தத்வ சேதனம் என்று எடுத்துக் கொண்டால் பௌத்தர்களும் ஜைனர்களும் இவற்றில் நல்ல சிறப்புப் பெற்றிருந்ததை ஆக்ஷேபிப்பதற்கில்லை. இலக்கியத்திலும் இவர்கள் தொண்டு அல்ப ஸ்வல்பமானதல்ல. இவர்களில் வடக்கே பௌத்தர் செல்வாக்கு அதிகம். தெற்கே சமணர் செல்வாக்கு அதிகம்.

'பள்ளி' என்று தமிழில் ஸ்கூல்களுக்குப் பேர் வந்ததற்குக் காரணமே முதலில் சமணப் பள்ளிகள் எனப்படும் ஜைனர் களின் துறவிச்சாலைகளிலேயே ஸகல ஜாதி ஜனங்களுக்குமான புதுமுறை போதனை தொடங்கியதுதான் என்கிறார்கள். 'பள்ளி' என்று பல ஊர் பேர்கள் முடிவதும் அங்கேயெல்லாம் சமணப் பள்ளிகள் இருந்தால்தான்; சிரா என்ற சமண முனிவரின் பள்ளி இருந்த இடம்தான் '(திருச்)சிராப்பள்ளி' என்றெல்லாம் அபிப்ராயமுண்டு.

(பள்ளி என்கிறபோது வேடிக்கையாக ஒன்று: பள்ளி கொள்வது, பள்ளியறை என்கிறபோது பள்ளி என்பது படுத் துக் கொள்வதைத்தானே குறிக்கிறது? மலைக் குகைகளில் வஸித்த அனேக சமணத் துறவிகள் திறந்த வெளியில் கல்லையே மழமழ என்று நைஸ் பண்ணித் தங்களுக்கு உண்

---

* அருள் உரை 12-வது புத்தகத்தில் இடம்பெற்றுள்ள 'முருகனின் வடநாட்டு அவதாரம்' என்ற உரையைப் பார்க்கவும்.

★ ஞானஸம்பந்தர் வாழ்க்கை குறிப்பிடப்படுவது தெளிவு

டாக்கிக் கொண்டிருந்த படுக்கைகள் இப்போதும் பாண்டி நாட்டிலும், திருச்சிராப்பள்ளி போன்ற இடங்களிலும் உள்ளன.

கேசத்தை ஒவ்வொன்றாகப் பிடுங்கிக் கொண்டே தலையை மொட்டையாக்கிக் கொள்ள வேண்டும் என்பது போல, தேஹ ச்ரமத்தையே முக்யமாகக் கொண்டு, அதனால் 'ச்ரமணர்' (சமணர்) என்றே பெயர் பெற்றவர்களானாலும், அவர்களிலும் தாரதம்யம் அதிகம் பார்க்காமல் நிறையத் துறவிகளை உண்டாக்கின போது, கல்லைக்கூடப் பஞ்சாகப் பண்ணிக் கொள்ளும் ஸொகுஸுக்கு இடம் கொடுக்க வேண்டியிருந்திருக்கிறது! நான் எந்த மதத்தையும் தூக்கவில்லை; கேலி பண்ணவும் இதைச் சொல்லவில்லை. பொது மனுஷ இயற்கை எப்படியிருக்கிறது; அதைக் கவனிக்காமல் லக்ஷ்ய நிலையைப் பரவலாக அமல் பண்ணப் பார்த்தால் எப்படி லக்ஷ்யமே நீர்த்துப் போகிறது என்றுதான் காட்டவந்தேன்.

பள்ளி – படுக்கை ஸம்பந்தத்துக்காகச் சொன்னேன்.

சமணப் பள்ளி, பௌத்தப் பள்ளி என்பதை வைத்தே பிற்பாடு துருஷ்க மதம் பரவினபோதும் மசூதிக்குப் பள்ளி வாசல் என்று பெயர் வந்திருக்கிறது. இதிலே பாமர ஜனங்களுக்கு உண்டான குழறுபடியால் பரமதஸ்தரில் எவர் எந்த மதத்தைச் சேர்ந்தவர் என்பது தெரியாமல் மலையாள தேசத்தில் இப்போதும் துருஷ்கர்களை 'பௌத்தன்மார்' என்று சொல்வதைக் கேட்கிறோம்!)

சமண – பௌத்தர்கள் கல்விக்கும் இலக்கியத்துக்கும் செய்த ஸேவை பற்றியல்லவா சொல்லிக் கொண்டிருந்தேன்?

ஐம்பெரும் காப்பியம் என்பவையே அவர்களுடையவை தான்!

தமிழ் இலக்கியத்தில் மிகவும் உயர்ந்ததாகச் சொல்லும் 'சிலப்பதிகார'த்தை எழுதிய இளங்கோ சமணத் துறவிதான். 'மணிமேகலை'யை எழுதியவர் பௌத்தரான சீத்தலைச் சாத்தனார். 'குண்டலகேசி'யும் பௌத்தக் காவியம்தான். 'சீவக சிந்தாமணி' திருதக்கத்தேவர் என்ற சமணர் செய்தது. 'கலிங்கத்

துப்பரணி' எழுதிய ஜயங்கொண்டாரும் சமணர்தான். 'நன்னூல்' என்ற இலக்கண நூல், 'யாப்பருங்கலக்காரிகை' என்ற செய்யுளிலக்கண நூல், 'அறநெறிச் சாரம்' என்று வைராக்கியத்தைச் சொல்லும் நூல், 'நாலடியார்' என்ற நீதி நூல் முதலானவையும் சமணர் எழுதியவைதான். 'வீர சோழியம்' என்ற இலக்கண நூல் பௌத்தர் எழுதியது.

வடக்கே பௌத்தர்களின் ஸர்வகலாசாலைகள் அன்னிய தேசங்களிலும் பெயரெடுக்கும்படியாக அவ்வளவு பெரிய அளவில், அனேக faculty-களுடன் (பாடத்துறைகளுடன்) பாடதிட்டமும் ரொம்ப க்ரமமாக வகுத்து நடந்திருக்கின்றன. சீன யாத்ரிகர்கள் பலர் நம் நாட்டுக்கு வந்ததற்கு முக்யமான காரணமே இவற்றில் சேர்ந்து புத்தமதத் தத்வங்களைப் படிப்பதற்குதான். இவர்களில் ஹுவான்-த்ஸாங் என்பவர் இங்கே படித்தது மட்டுமில்லாமல் நாலந்தா ஸர்வ கலாசாலையில், தற்போது Dean என்று சொல்கிற ஸதானத்தில், ஆசிரியராகவும் இருந்திருக்கிறார் என்று ஸமீபத்தில் படித்தேன்.



# எழுத்துக்கு முக்யத்வம்

**பௌ**த்தர்களுடைய கலாசாலைகள் அடைந்த பெரிய வளர்ச்சிக்கு இன்னொரு காரணம்கூட அதில் பார்த்தேன். பிராமணர்கள் ஞாபகசக்திக்கு ரொம்பவும் முக்யத்வம் கொடுத்தவர்கள். 'மயி மேதாம்' என்று நல்ல தீக்ஷ்ணமான புத்திக்கே உரிய memory power-ஐ அவர்கள் விசேஷமாக ப்ரார்த்தித்துப் போற்றி வளர்த்துக் கொண்டவர்கள். இதை நன்றாக வளர்த்துக் கொண்டு எதையும் காதால் ஒருதரம், அல்லது இரண்டு மூன்று தரம், கேட்டே புத்திக்குள்ளே பதித்துக் கொள்வார்கள். சுத்தமான வாழ்க்கை; லௌகிக ஸௌகர்யங்களுக்குப் பறந்து புத்திசக்தியை வ்ரயம் பண்ணிக் கொள்ளாத எளிய ஜீவனம்; கர்மானுஷ்டானங்களை நிரம்பப் பண்ணி சரீரத்தைச் சக்கையாகப் பிழிந்து அதன் பசிகளை வடித்து ஓட்டுவது – ஆகியவற்றால் பெறுகிற புத்தி ப்ரகாசம்; அதோடு காயத்ரீ, வேதாத்யனம், ப்ராணாயாமம் முதலியவற்றால் பிரம்மசர்யத்தின் மூலம் உண்டாகும் அறிவொளி – இத்தனையாலும் நல்ல 'மெமரி பவ'ரை 'டெவலப்' பண்ணிக் கொள்ள வேண்டும் என்பதே பிராமணர்களின் பழக்கமாயிருந்திருக்கிறது. ஏனென்றால் இவனுக்கு 'டீச்சிங்' ஆறு கடமைகளில் ஒன்று. பல துறைக்காரரர்கள், பல தொழில்காரரர்கள் இவனிடம் விஷயங்கள் தெரிந்து கொள்ள வருவார்கள். வித்வத்ஸதஸில் பண்டிதர்கள் இவனைப் பல சாஸ்த்ர விஷயங்களைப் பற்றிக் கேட்பார்கள். அப்போதெல்லாம் இவன் ஒவ்வொன்றுக்கும் புஸ்தகத்தை நோண்டிப் பார்த்துப் பதில் சொல்வதென்றால் முடியுமா? ஆனதால் அத்தனை புஸ்தகமும் இவன் மூளைக்குள்ளேயே வந்துவிடும்படியாக அப்படிப் புத்தியைப் பளிச்சென்று சுருக்காகத் தீட்டி வைத்துக் கொள்ளவேண்டும்; ஞாபக சக்தியை நன்றாகச் சாணை பிடித்து ஜ்வலிக்கப் பண்ணிக் கொள்ள வேண்டும்; இதற்கான த்யாகங்களை இவன் செய்தாக

வேண்டும் – என்பதை ஸத் பிராமணர்கள் ஒரு கொள்கையாகக் கடைப்பிடித்து வந்தார்கள். அதனால்தான் இத்தனாம் பெரிசான வேதமே 'ச்ருதி' (காதால் கேட்கப்பட வேண்டியது; கண்ணால் படிக்கப்பட வேண்டியதல்ல) என்றும் 'எழுதாக் கிளவி' என்றும் பெயர் பெற்றிருக்கிறது. மூளைக்குள்ளே விஷயங்களைக் கொண்டு வராமல், புஸ்தகத்தில், சுவடியில் எழுதிவைப்பது என்றால், 'புஸ்தகம்தான் இருக்கே, அதைப் பார்த்துக் கொண்டால் போகிறது என்ற எண்ணம் வலுப் பட்டுக் கொண்டே போகிறது. 'டெக்ஸ்ட்'டை மனப்பாடம் செய்வதில்லை என்பதோடு மட்டுமில்லாமல், எதையும் ஊன்றிப் படித்து அதன் தாத்பர்யத்தை க்ரஹித்துக் கொள்வதென்பதும் குறைந்து கொண்டு போகிறது. இதை ப்ரத்யக்ஷத்திலேயே பார்க்கிறோம். 'எழுதி வைத்துவிட்டாயா? அப்புறம் அது ப்ரயோஜனத்துக்கு வராது என்றுதான் அர்த்தம்' என்ற அளவுக்கு நம் பூர்விகர்கள் நினைத்திருக்கிறார்கள். 'ஸஹஸ்ரம் வத – ஏகம் மா லிக: ஆயிரம் விஷயத்தைச் சொல்லு; ஆனால் ஒன்றைக்கூட எழுதிவைக்காதே' என்றே வசனம்.

இந்தப் பழக்கத்துக்கு மாறாக எழுதுவது, எழுதி வைத்த சுவடிகளைப் படித்துப் பாடம் சொல்வது என்று பௌத்தர்களே ஆக்கினார்கள் என்று (ஸமீபத்தில் நான் பார்த்த) அந்தப் புஸ்தகத்தில் போட்டிருந்தது. இந்த நாள் ஆராய்ச்சிக்காரர்களின் அபிப்ராயப்படி, அலெக்ஸாண்டர் படையெடுப்புக்குக் கொஞ்சகாலம் முந்தி, அதாவது கி.மு. ஆறாம் நூற்றாண்டில்தான் நம்முடைய சாஸ்த்ரம் ஒவ்வொன்றையும் ஸார பூதமாகச் சுருக்கித்தரும் 'ஸூத்ரங்கள்' என்பவை (ப்ரம்ஹ ஸூத்ரம், யோக ஸூத்ரம், வ்யாகரண ஸூத்ரம் போன்றவை) தோன்றின என்று இதை எழுதியவர் நினைக்கிறார். பாணினியின் வ்யாகரண ஸூத்ரத்தில் 'லிபிகார' (எழுதுகிறவன்) என்ற வார்த்தையும், புஸ்தகம் என்பதைக் குறிக்கும் 'க்ரந்தம்' என்ற வார்த்தையும் வருகின்றன. ஆனதால், ஸூத்ர காலத்திலேயே நம்மவர்களுக்கு 'ரைட்டிங்' (எழுதுவது) என்பது தெரிந்து தானிருந்தது என்பதற்குச் சான்று இருக்கிறதென்றும் அதில் கண்டிருக்கிறது. ஆனால் ரொம்பவும் 'மினிம'மாகவே எழுதி வைப்பதை அக்கால இந்தியர்கள் கைக்கொண்டார்கள்.

ராஜாக்கள் நிருபம் அனுப்புவது மாதிரியான காரியங்களுக்கு மட்டும்தான் ரைட்டிங்கைப் பயன்படுத்தினார்களே தவிர சாஸ்திரங்களையும் இலக்கிய ஸ்ருஷ்டிகளையும் எழுதாமல் வாயால் சொல்லிக் கொடுத்துத்தான் 'மெமரைஸ்' பண்ண வைத்தார்கள் என்று (அந்தப் புஸ்தகமெழுதியவர்) சொல்கிறார். வேதம் என்று சொன்ன மாத்திரத்தில் நினைக்கப்படும் அதன் 'ஸம்ஹிதா' பாகத்தில் மட்டுமின்றி, அவற்றின் சடங்குகளுக்கு விளக்கமாகச் செய்முறைகளைச் சொல்லும் 'பிராமணங்கள்' தோன்றிய காலத்தில்கூட இவையும் எழுதப்படவில்லை; இவற்றிலே மரத்திலிருந்து உரித்த பட்டை, தோல் ஆகிய பழங்காலப் பேப்பரைப் பற்றியோ, எழுத்தாணி அல்லது மை பற்றியோ குறிப்பில்லை என்று அவர் சொல்லி விட்டு, ப்ராம்மி லிபியில் ரொம்பவும் பூர்வ காலத்தியதாக நமக்குக் கிடைத்திருப்பதே கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் பொறிக்கப்பட்ட அசோக சாஸனங்கள்தான் என்று காட்டியிருக்கிறார். இவை பௌத்தமதத் தொடர்புடையவைதான். ராமாயண, பாரதங்களில் ராமர், பாண்டவர்கள் ஆகியவர்கள் வித்யாப்யாஸம் பண்ணியதைப் பற்றி வந்தாலும் அவர்கள் எழுதக் கற்றுக் கொண்டார்கள் என்று அவற்றில் இல்லை என்றும், புத்தர் சரித்ரமான 'லலித விஸ்தர'த்தில்தான் அவர் குழந்தையாயிருந்தபோது எழுதக் கற்றுக் கொண்டதாக வருகிறது என்றும் காட்டியிருக்கிறார். காதால் கேட்டு மட்டுமே அறிய வேண்டியது 'ச்ருதி', நினைவில் வைத்திருந்தே தானும் அனுஷ்டித்துப் பிறருக்கும் சொல்லித் தரவேண்டியது 'ஸ்ம்ருதி'; ஆகக்கூடி இந்தப் பெயர்களே எழுதத் தெரிந்தாலுங்கூட அப்படிப் பண்ணி விஷயத்தை 'சீப்'பாகவோ, மறந்துபோகும்படியாகவோ பண்ணக்கூடாது என்ற கொள்கையைத்தான் நிரூபிக்கின்றன என்று அவர் சொல்கிறார்.

வேதத்தை எழுத்திலே படித்துப் பாடம் பண்ணும் 'லிகித பாடக'னை மஹா மட்டமான மாணவன், 'பாடகாதமன்' என்றே சொல்லியிருக்கிறது. இதற்கு மாறாக சாஸ்த்ரங்களை எழுதி வைப்பதென்று ஆரம்பித்தவர்கள் பௌத்தர்கள்தான் என்று அந்தப் புஸ்தகத்தில் பார்த்தேன்.

இதற்குக் காரணமில்லாமல் இல்லை.

க்ஷத்ரியர்களுக்கு யுத்தகார்யம், உள்நாட்டுப் போலீஸ் கார்யம், ராஜாங்க அதிகாரிகளாகப் பணி ஆற்றுவது முதலிய வையே தர்மம். வைச்யன் கோ ஸம்ரக்ஷணமும் வியாபாரமும் பண்ண வேண்டியவன். நாலாம் வர்ணத்தவர் சரீர உழைப்பை ஜீவனத் தொழிலாகக் கொண்டவர்கள். இவர்களையெல்லாம் சின்ன வயஸில் பிராமணப் பசங்களைச் செய்கிற மாதிரியே குருகுலத்தில் வருஷக் கணக்காக அடைத்து வைத்து, 'புத்தி சக்தியைத் தீட்டிக்கணும், ஞாபக சக்தியைக் கூர் பண்ணிக் கணும், எழுதிப்படிக்காமலே மனப்பாடம் பண்ணணும்' என்று நெரிப்பதால், பிற்காலத்தில் அவர்கள் நடத்தப்போகிற வாழ்க்கைத் தொழிலுக்கு என்ன ப்ரயோஜனம்? ப்ரயோஜன மில்லாததோடு குந்தகமேகூட உண்டாகும். ஏனென்றால் பின்னாடி மேற்கொள்ளப் போகிற தொழிலுக்குப் பூர்வாங்க மாக பால்யத்திலேயே இவர்கள் அவரவர் வர்ணத்தைப் பொறுத்து தனுர்வேதம் அப்யஸிப்பது, நடைமுறையைப் பார்த்தே வ்யாபாரத் திறமைகளைக் கற்றுக் கொள்வது, சிற்றாள் மாதிரி அப்பனோடு – பாட்டனோடு உழைத்தே தொழில் கற்றுக் கொள்வது ஆகியவற்றுக்கு அவகாசம் தராதபடி அல்லவா இந்த ஓயாத மனப்பாடமுறை குந்தகம் பண்ணும்? அதோடு நான் சொன்னபடி பூர்விகர் பெடல் பண்ணிவிட்ட பாரம்பர்ய உந்தல் சக்தியும் இவர்களுக்கு இந்த அம்சத்தில் இருக்காதே! அவர்களை நான் குறைவு படுத்திச் சொல்லவே இல்லை. அதனால்தான் 'இந்த அம்சத்தில்' என்று (அழுத்தம் கொடுத்துச்) சொல்கிறேன். அவரவருக்கும் அவர வருக்கான தொழிலில் பாரம்பர்யத் திறமை அலாதியாக சோபிக்கத்தான் செய்யும். ஒரு க்ஷத்ரியப் பிள்ளை கத்தி சுழற்றுகிற மாதிரி லாகவமாகப் பண்ண பிராமணப் பிள்ளைக்கு ஒரு ஆயுஸ் காலம் பிடிக்கும். ஒரு வைச்யப் பிள்ளை சரக்கைத் தரம் பார்த்தும், லாபமாகவும் கொள்முதல் பண்ணுகிறது போல மற்ற ஜாதிக்காரரில் வயஸு வந்தவர் களாலும் முடியாது. இப்படியேதான் நாலாம் வர்ணத்தவரின் உழைப்புத் திறமையும். நம்மகத்துப் பெண்டுகள் ஒரு பஞ்சபாத்ரம் தேய்க்கிற நாழிக்குள் வேலைக்காரியோடு வருகிற குட்டி அத்தனை பாத்திரங்களையும் தேய்த்து (துலக்கி)ப் போட்டுவிடும்!

நான் சொல்வது என்ன என்றால் – அந்தப் புஸ்தகத்தில்

பௌத்தர்கள்தான், கேட்பது (கேள்வி) என்றே அதுவரை இருந்த வித்யாப்யாஸத்தை இப்போது நாம் சொல்கிற மாதிரி படிப்பு என்பதாக எழுதி வைத்துக் கண்ணால் பார்த்துப் படிப்பதாக ஆக்கினார்கள் என்று சொல்லியிருப்பதற்கு ந்யாய மிருக்கிறது என்பதே! பிராமணர்களுக்கே பெரும்பாலும் வித்யாப்யாஸம் என்று இருந்தவரையில் கேள்வி போதுமான தாயிருந்தது. மற்றவர்களுக்காகவும் சேர்த்துப் பௌத்தர்கள் வித்யாசாலைகள் ஸ்தாபிதம் பண்ணியபோது, மனப்பாடமாக இல்லாமல் அவ்வப்போது புஸ்தகத்தில் பார்க்கும்படியாக எழுத்து மூலம் கற்றுக் கொடுப்பது அவச்யமாயிற்று.

ஆனாலும் நான் முன்னேயே சொன்னபடி இந்த வித்யா சாலைகளிலும் பிராமணர்கள், அடுத்தபடி க்ஷத்ரியர்கள் ஆகியோர் சேர்ந்த அளவுக்கு மற்றவர்கள் சேரவில்லை. அதோடு ஸமீபகாலம் வரை அவர்கள் அவர்களுக்கு உண்டான தொழில் எதுவோ அதற்கான திறமையை ஒன்று, 'ப்ராக்டிகல் ட்ரெயினிங்'கால் அனுபவ பூர்வமாகத்தான் பெற்றிருந்தார்கள்; அல்லது, அந்தத் தொழில் குறித்துச் செய்யுள் ரூபமாக – ச்லோக ரூபமாக இருக்கப்பட்ட நூலை ஆதி வழக்கப்படி மனப் பாடம் செய்து அறிந்ததாலேயே பெற்றிருந்தார்கள். ஒரு நாட்டு வைத்தியரிடம் போனால் தெரியும்: அவர் மருந்துத் தயாரிப்பு முறைகளைப் பாட்டாகவே கடகடவென்று சொல்லிக் கொண்டு போய் விடுவார். ஸ்தபதி ச்லோகமாக ஒப்பித்துக் கொண்டு போவார். 'எழுதப் படிக்கத் தெரியுமா?' என்று கேட்கிறோமல்லவா, இதில் அனேகக் கிராம ஜனங்களுக்குப் போன தலைமுறைவரை இரண்டுமே தெரியாமல், ஆனால் தங்கள் தொழில் மட்டும் நம்முடைய B.E-க்கும் B.Tech-க்குங் கூடத் தெரியாத அளவுக்கு அத்தனை நுட்பமாகத் தெரிந் திருக்கும். இவர்களில் சிலர் படிப்பதற்கு மட்டும் தெரிந்து கொண்டு படித்ததை மனப்பாடம் பண்ணியிருப்பார்கள். மற்றவர்கள் காதால் கேட்டே மனப்பாடம் பண்ணியிருப் பார்கள். கொஞ்சம் பேருக்கே எழுதவும் தெரிந்திருக்கும். விசேஷமான 'மெமரி பவர்' இவர்களுக்கு இல்லாது போனாலும், அனாவசிய ஊர்க்கதைகள் இல்லாமல் தங்கள் ஸப்ஜெக்டை மட்டும் தெரிந்துகொள்ள வேண்டும் என்னும் போது, அதை மனப்பாடமாகவே மூளைக்குள் வைத்துக் கொள்கிற அளவுக்குப் புத்தி தீக்ஷணம் இருக்கவே செய்தது.

இது அத்தனையும் நான் ஜெனரலாகச் சொன்னது. பிராமணர்களில் மக்குப் பிள்ளைகள் இல்லாமலில்லை. இதர ஜாதிகளில் மஹா புத்திமான்களாக பலபேர் வந்ததையும் பூர்வத்திலேயே பார்த்திருக்கிறோம்; இன்றும் பார்க்கிறோம்.

பெரிய பௌத்தக் கல்விக்கூடங்கள் ஏற்பட்டபின் எழுத்து மூலம் கற்பிப்பதுதான் வழி என்றாகிவிட்டது.

இதற்கு இன்னொரு காரணம் நாளுக்கு நாள் சாஸ்த்ரங்கள் விரிவடைந்து கொண்டுபோனதும், புதுப்புது சாஸ்த்ரங்களும், கலைகளும், 'விஞ்ஞானம்' என்று சொல்லப்படுகிற ஸயன்ஸ் களும் சேர்ந்து கொண்டேயிருந்ததுமாகும். எத்தனை குசாக்ர புத்தியானாலும் (தர்ப்பை நுனிபோல் கூரறிவானாலும்) இத்தனை விஷயங்களை எப்படி ஞாபகத்தில் வைத்தே காப்பாற்ற முடியும்? அதனாலும் எழுதி வைத்துப் போதிக்க வேண்டியதாயிற்று!



## வைதிகக் கல்விக்கும் பெரிய கலாசாலை

**பௌத்த** - சமணர்கள் பெரிய ஸ்கேல் வித்யாசாலை களால் ப்ரபலமடைந்தபோது தாய் மதமான வைதிக ஸமயம் மாத்திரம் நன்றாகத் தலைதூக்கி நிற்க வேண்டுமானால் அவற்றுக்குப் பின்தங்கி நின்றுவிட முடியுமா?

அதனால் வைதிக வித்யைகளும், அவற்றோடு மற்ற பாடங்களும் சொல்லித் தருவதற்காக ஹிந்துக்களும் பெரிய பாடசாலைகள் வைக்கத் தொடங்கினார்கள். எப்போதுமே எதிர்ப்பு இருந்தால்தான் ஒரு புதிய விழிப்பு, எழுச்சி, ஊக்கம் எல்லாம் ஏற்படும். நம் நாளில்கூட நாஸ்திக்ய ப்ரசாரம் ஏற்பட்டதாலேயேதான், ஆஸ்திகர்கள் என்று சொல்லிக்

கொண்டு பக்தியோ ஆசாரமோ எதுவுமில்லாமல் சோம்பேறி களாக இருந்தவர்களுக்கு ஒரு விழிப்பு ஏற்பட்டு இவ்வளவு கும்பாபிஷேகங்கள், ப்ரவசனங்கள் என்று நடக்க ஆரம்பித்த தும், அவரவரும் வீட்டில் ஏதோ ஒரு வழிபாடு வைத்துக் கொண்டு சில ஆசாரங்களையும், வ்ரதங்களையுமாவது அனுஷ் டிக்கத் தொடங்கியதும்! இதைப் போலவே விஷயம் தெரியாத வர்களாக பிராமணர்கள் ஓரளவு ஆகி வந்த ஸமயத்தில் புத்தர் தோன்றி அவர்களுடைய வழியைக் கண்டனம் செய்து, அவருடைய மதத்துக்கு ஆதரவாக பெரிய அளவில் வித்யா சாலைகள் ஏற்பட்டதும் வைதிக ஸமூஹத்திலும் ஒரு பிரிவினர் கொஞ்சங் கொஞ்சமாக விழித்துக்கொண்டு அதே மாதிரித் தாங்களும் செய்து தங்களை விஷயக்ஞர்களாக்கிக் கொள்வதற் காக அவற்றில் பெருமளவில் சேரத் தொடங்கினார்கள். இதனால் வைதிக ஸமயம், புறச்சமயங்கள் இரண்டிலுமே பெரிதான கல்விக்கூடங்கள் நிறையத் தோன்ற ஆரம்பித்தன. இரண்டு தரப்பிலும் தத்வ சாஸ்த்ரங்கள், இலக்கியம், மற்ற கலைகள், ஸயன்ஸ்கள் முதலியனவும் இதன் வழியாய் நாளுக்கு நாள் வளர்ந்தோங்கலாயின.

ஆர்கனைஸேஷன் இல்லாமல் தனிமனிதனின் அனுஷ்டான சக்தியாலேயே வைதிக மதமும் கலாசாரமும் ஆதியிலிருந்து வளர்ந்தனவென்றாலும், 'ஸங்கம் சரணம் கச்சாமி' என்பதாக ஆர்கனைஸேஷனல் அடிப்படையில் பௌத்தமும் அதேபோல சமணமும் வ்ருத்தியான பிற்பாடு நம் மதத்திலும் ஆர்கனைஸே ஷன் என்று ஏற்படுத்த வேண்டிய அவசியம் உண்டாயிற்று. (இதை) முன்னேயே சொன்னேன். இதே மாதிரிதான் – இதன் உபாங்கங்களாகவேதான் – என்னதான் ஆசார்யாள் பழைய ஏற்பாடுகளைப் புனருத்தாரணம் செய்தாலும், புதிதாக ஏற்பட்டுவிட்ட இதர மதஸ்தர்களின் ஸர்வகலாசாலைகளுக்கு ஈடுகொடுக்கத் தனித்தனி ஆசார்யர்களின் குருகுலங்கள் போதாது என்பதால் நம்முடைய ஹிந்து மதத்துக்கும் – வேத வித்யையோடு மற்ற சாஸ்திரங்களை, மற்ற கலைகளை, அக்கால ஸயன்ஸ்களைச் சொல்லிக் கொடுப்பதற்கும் – பல வாத்யார்கள் ஸ்தாபனமாகக் கூடிப் போதிக்கும் கல்விசாலை கள் முன்பிருந்ததைவிட நிறைய அமைக்க வேண்டியதாயிற்று. குருகுலம் என்பதோடுகூட 'பாடசாலை' என்பதும் இப்போது

தான் நிறையச் சேர்ந்தது.

இப்படி வேதக் கல்விக்காக ஏற்பட்ட பெரிய பாடசாலை களைத்தான் வடக்கே 'டோல்' என்கிறார்கள். எலிமென்டரி ஸ்கூல் மாதிரி உள்ளதை வடக்கே பாடசாலா என்பார்கள்; விஸ்தாரமாக வ்யாகரணம், ஜ்யோதிஷம், காவ்யம் எல்லாம் சொல்லிக் கொடுக்குமிடத்தை 'டோல்' என்பார்கள்.

இப்படி ரொம்பவும் பெரிய அளவில் பல, நம்முடைய ஹிந்துமத ஸம்பந்தமுள்ளவையாக இருந்திருக்கின்றன.

சம்பளத்தைக் கருதாமல், வித்யாப்யாஸம் பூர்த்தியான போது சிஷ்யன் என்ன தக்ஷிணை கொடுத்தாலும் அதில் த்ருப்திப்படும் ஆசார்ய வர்க்கம் போய், ராஜா அல்லது ப்ரபு, அல்லது ஊர் முக்யஸ்தர்கள் மான்யம் விட்டோ, என்டோ மென்ட் வைத்தோ கல்வி நிலையங்கள் ஏற்படுவதாகவும், அவற்றிலிருந்து ஊதியம் பெறும் உபாத்யாயர் வர்க்கம் தோன்றுவதாகவும் இப்போதே முன்னைவிட மிக அதிகமாக, பரவலாக ஏற்பட்டது.

(பிராமணன் மட்டுமில்லை; குயவன், வண்ணான் உட்பட எல்லாத் தொழில்காரருக்கும், கிராம தேவதைப் பூசாரி, அங்கே பம்பை அடிக்கிறவன் உள்பட எல்லாருக்குமே குலத் தொழிலைச் செய்து வருவதற்காக ராஜமான்யம் உண்டு.)

ஆதிகால முறையில் அதிகமாக நடைமுறையிலிருந்தது என்னவென்றால்: சிஷ்யன் பிக்ஷை வாங்கிவந்து குரு பத்னியி டம் கொடுப்பான். அவளும் அகத்தில் சமையல் பண்ணியிருப் பாள். ஏனென்றால் பிக்ஷான்னத்தைக் கொண்டு வைச்வ தேவ பலி போடவோ ஸ்வாமி நைவேத்யம் பண்ணவோ முடியாது. க்ருஹஸ்தனாகிய குருவுக்குப் பக்வமான ஆஹாராதிகளை – அதாவது சமைத்த பண்டங்களை – பிறத்தியாரிடமிருந்து வாங்கிக் கொள்ள சாஸ்த்ரம் அனுமதிக்கவில்லை. ஆனபடி யால் குருவின் அகத்தில் தனிச் சமையல் உண்டு. வித்யாசாலை நடக்க வேண்டுமென்பதை முக்ய உத்தேசமாகக் கொண்டு பிற்காலத்தில் ராஜமான்யம் முதலியன வழங்கப்பட்டதுபோல ஆதிகாலத்தில் வழங்கப்படாவிட்டாலும் ஸத்வித்வான்களைப்

போஷித்து அவர்களுடைய ஆசீர்வாதத்தைப் பெற வேண்டு மென்பதற்காகவும், அவர்கள் யாகங்கள் செய்து தேச ஸுபிக்ஷத்தை வளர்க்க வேண்டுமென்பதற்காகவும் ஆதிகால ராஜாக்களும் அந்த ஆசார்யர்களுக்கு ஸம்பாவனைகள் பண்ணிக் கொண்டுதான் இருந்தார்கள். இதிலே கிடைக்கும் பூ ஸ்திதி (நிலச் சொத்து), ஸ்வர்ணம் முதலியவற்றைக் கொண்டு தான் ஆசார்யர்கள் யாகம் செய்தது. அது மாத்திரமில்லாமல் மேலே சொன்னதுபோல தனிச் சமையல் முதலான குடும்பச் செலவுகளை ஈடுகட்டியது. சிஷ்யனுக்கு அவன் கொண்டு வரும் பிக்ஷான்னத்தோடு இந்த அகத்துச் சமையலையும் சேர்த்துப் போடுவாள் குரு பத்னி. 'நன்னா சாப்பிடுடா கொழந்தே' என்று பரிந்து போடுவாள். நாள், கிழமை என்றால் அவனுக்கு வஸ்த்ராதிகள் குருவே ஆசீர்வாதம் பண்ணிக் கொடுப்பார். இப்படி, சிஷ்யனின் உடல், பொருள், ஆவி குருவிடம் சரணா கதியானாற் போலவே, குருவும் உடல், பொருள், ஆவிகளை சிஷ்யனுக்கு அனுக்ரஹித்தார்.

இந்த உசந்த நிலை போய், மான்யத்திலிருந்து சம்பளம் வாங்கிக் கொண்டு அறிவை மட்டுமே மாணவனுக்கு உபாத்யா யர் கொடுப்பதை முக்யமாகக் கொண்ட முறை, பெரிய வித்யாசாலைகள் ஏற்பட்டபோது உண்டாயிற்று. இத்தனை நாழி சொன்னாற்போல, தவிர்க்க முடியாத பல காரணங் களால் இப்படி ஏற்பட்டது.

நாளுக்கு நாள் ஒவ்வொரு ஸப்ஜெக்டிலும் புதுப் புது விஷயங்கள் சேர்ந்து கொண்டே போனதாலும் புதிசு புதிசா கவே பல ஸப்ஜெக்ட்கள் தோன்றிக் கொண்டிருந்ததாலும் பல உபாத்யாயர்களை ஒன்றுகூட்டி வித்யாசாலைகளை நிறுவி, வெவ்வேறு மாணவர்களுக்கு வெவ்வேறு க்ளாஸ்கள் வைத்து நடத்தினால்தான் ஸரிப்பட்டு வரும் என்ற தவிர்க்க முடியாத நிலை ஏற்பட்டது. நடுவே பிராமண தர்மங்கள் மங்கி, பரமதங் கள் பரவியதனாலும் குருகுலமுறை ஆட்டம் கண்டதால் மறுபடி வைதிக வித்யையைப் பிரகாசிப்பிக்க வேண்டுமென் னும்போது இப்படிப்பட்ட பெரிய வித்யாசாலைகளை ஏற்படுத்தினால்தான் முடியும் என்று ஆயிற்று!



# பெரும் கலாசாலையிலும் குருகுல அம்சங்கள்

பழைய குருகுல உயர்வு இவற்றில் இல்லாததால், தற்காலக் காலேஜ்கள், யுனிவர்ஸிடிகள் லெவலில் இவற்றைக் கழித்துக் கட்டிவிடக்கூடாது. இவையும் ஒருவிதத்தில் குருகுலங்களாகத் தானிருந்தன. அதாவது இவற்றின் மாணாக்கர்களும் அகத்தி லிருந்து கொண்டு தினந்தோறும் வித்யாசாலைக்குப் போனவர் களில்லை; அந்தக் கலாசாலைகளிலேயே தங்கியிருந்து படித்த வர்கள்தான். இப்படிச் சொன்னால் இந்நாள் ஹாஸ்டல் மாதிரி என்று நினைத்துவிடக்கூடாது. ஹாஸ்டலில் ஏகப்பட்ட பசங் களுக்கு ஒரு வார்டன்தான். அங்கே வாத்யார்களுக்கு வாஸ மில்லை. நான் சொல்லும் வித்யாஸ்தானங்களில் இப்படி யில்லை. பசங்களைப் பிரித்து ஹாஸ்டல் என்று வைக்காமல் வாத்யார்கள், பசங்கள் எல்லாரும் கலந்து ஒரே இடத்தில் வஸித்தார்கள். இதனால் ஏகப்பட்ட பேரை மேற்பார்வை செய்து கட்டுப்படுத்தி நடத்த ஒரே வார்டன் என்பது போலில் லாமல், கட்டுப்பாடு செய்ய நிறைய வாத்யார்கள் கூடவே வஸித்தார்கள். இதில் குறிப்பாக அந்தந்த ஸப்ஜெக்ட், அந்தந்த க்ளாஸ் மாணவர்களுக்கு அவர்களுக்கான வாத்யார் யாரோ அவரே வார்டன் ஸ்தானத்தில் இருந்திருக்க வேண்டும். அதாவது தற்போது மிகவும் கொஞ்சமாகக் கட்டுப்பாடு வைத்து ஹாஸ்டல் பசங்களை அவிழ்த்து விட்டிருக்கிறாற் போலின்றி, தனித்தனிக் குருகுலங்கள் குறைந்தபின் ஏற்பட்ட பெரிய வித்யாசாலைகளிலுங்கூட அவர்கள் குருமார்களின் கண்டிப்பான கட்டுப்பாட்டின் கீழேயேதான் இருந்தார்கள்.

தக்ஷசிலத்தில் பௌத்தர்களின் வித்யாசாலையில் தனித்தனி உபாத்யாயர்கள் ஒவ்வொருவரும் தங்களுக்கென ஒரு சில மாணவர்களை வைத்துக் கொண்டு, ஒரே இடத்திலே பல குருகுலங்கள் அமைந்தாற்போலத்தான் கல்வி அளித்தார்கள். Centralised University-யாக (மையமான ஆளுமை கொண்ட

பல்கலைக்கழக அமைப்பாக) அது இல்லை. நாலந்தாதான் பிற்கால யுனிவர்ஸிடி அமைப்பிலேயே இருந்தது. ஆனாலும் தக்ஷசிலத்தில் இருந்தவற்றை குருகுலங்கள் என்று சொல்ல முடியாதபடி அவற்றிலே ஒரு பெரிய குறைபாடு இருந்தது. என்னவென்றால், அங்கே மாணவர்களிடம் சம்பளம் வாங்கிக் கொண்டு படிப்புச் சொல்லிக் கொடுக்கப்பட்டது. ஃபீஸ் கட்ட முடியாவிட்டால் சரீர கைங்கர்யம் செய்ய வேண்டுமென்று வைத்திருந்தார்கள். ஸாக்ஷாத் க்ருஷ்ணனாக இருந்தாலும்கூட சரீர கைங்கர்யம்தான் பண்ண வேண்டுமென்றும், படிப்பு முழுவதும் முடிந்து சிஷ்யன் தானாக தக்ஷிணை தருகிறவரை யில் ஃபீஸைப் பற்றிய பேச்சே கூடாது என்றும் வைத்திருந்த குருகுலங்களோடு இதை எப்படிச் சேர்ப்பது? பாடம் சொல்லித் தந்தவர்களோ பிக்ஷுக்கள். அவர்களுக்கு வேண்டி யதைச் செய்ய வசதி வாய்ந்த புத்த விஹாரமும் அங்கேயிருந் தது. அப்படியிருந்தும் சம்பளம் வாங்குகிற வழக்கத்தையும் வைத்துக் கொண்டிருந்திருக்கிறார்கள். ஆனாலும் மாணவர் களைத் தனித்தனியாகக் கவனித்து ('இன்டிவிஜுவல் அட்டென்ஷன்' கொடுத்து) அபிவ்ருத்தி செய்ய வேண்டுமென் பதால் ஒவ்வொரு வாத்தியார் பொறுப்பில் இத்தனையித்தனை பசங்கள் என்று பிரித்திருந்தது பாராட்டப்பட வேண்டியது தானே!

நூற்றுக்கணக்கான மாணவர்கள் படித்த வைதிகமான வித்யாசாலைகளில் அவர்கள் பிக்ஷாசர்யம் செய்திருப்பதற் கில்லை. நேராக வேத உபநிஷத்துகள் படிப்பவர்களை மட்டும் பிக்ஷாசர்யத்துக்கு விட்டிருக்கலாம். ஆனாலும் மற்றவர்கள் விஷயத்திலுங்கூட இப்போது போல் கண்டதைத் தின்னுவது, கண்டதைப் பார்ப்பது, கண்டதைப் பேசுவது என்பதற்கிட மில்லாமல் இவையெல்லாம் குருமார்களால் ஒழுங்குமுறைப் படி நிர்வஹிக்கப்பட்டன. எல்லாவற்றுக்கும் மேலாக இப்போது கல்விச்சாலைகளில் எதை அடியோடு ஸம்பந்தமே யில்லாத விஷயம் என்று ஒதுக்கி வைத்து விட்டார்களோ, ஆனால் அந்த எதற்குத்தான் ஆதிகால குருகுலத்தில் முதல் முக்யத்வம் தந்தார்களோ அது இந்தக் கலாசாலைகளிலும் நன்றாக அமலாயின. அதாவது, மாணவர்கள் தங்களுக்குரிய ஸமயானுஷ்டானங்களைக் கொஞ்சமும் விடாமல் செய்யும்படி

இவற்றில் செய்தார்கள். இதுதான் நம் பெரிய நாகரிகம் எப்போதும் ஜீவசக்தியுடன் இருக்கும்படியாக அதற்கு உயிரூட்டிக் கொண்டிருந்த அம்சம்.

அக்கால இலக்கியம், சரித்ரம், சாஸனங்கள் முதலியவற்றைப் பார்க்கும்போது இந்த வித்யாசாலைகளின் ஆசிரியர்கள், மாணவர்கள் ஆகிய இரு சாராரின் தரமும் ரொம்பவும் உயர்வாக இருந்திருக்கின்றன என்று தெரிகிறது. பழைய ரிஷிகளின் ஆச்ரமத்துக்கு ஸமதையாயில்லாவிட்டாலும் இந்த வித்யாசாலைகளிலும் உயர்ந்த குரு - சிஷ்யப் பண்புகள் விளங்கி வந்தன என்று தெரிகிறது. நல்ல அறிவாளிகளாகவும், சீலமுள்ளவர்களாகவும் உள்ள ஆசிரியர்கள் இவற்றில் இருந்து கொண்டு நிஜமாக வித்யையில் ஆர்வமும், அறிவும், அடக்கமும், கட்டுப்பாடும், ஆசார்ய பக்தியும் உள்ள மாணாக்கர்களுக்குப் போதித்திருக்கிறார்களென்று தெரிகிறது.

ஒவ்வொரு சாஸ்த்ரம், அல்லது ஒவ்வொரு கலையில் சிறப்பான ஞானம் பெற்றவர்கள் தேசத்தின் ஏதோ ஒரு பகுதியில் நிறைய இருக்கிறார்களென்றால், ஆயிரம் இரண்டாயிரம் மைலுக்கு அப்பாலிருக்கிற வித்யார்த்திகள்கூட, இந்நாளைப் போல ரயிலும், ப்ளேனும், தபாலும் இல்லாத அந்த நாளிலேயே வீட்டை வாசலை விட்டு, பந்துமித்ரர்களை விட்டு தொலைதூரத்திலுள்ள அந்த வித்யாசாலைக்குப் போய்ப் படித்திருக்கிறார்கள். ஒன்று - இரண்டு த்ருஷ்டாந்தம் அப்புறம் சொல்கிறேன்.



# காஞ்சியின் கல்விப் பெருமை

தேசம் நெடுகிலும் ஏற்பட்ட இப்படிப்பட்ட வைதிக தர்ம ஸம்பந்தமுள்ள பெரிய வித்யாசாலைகளில் குறிப்பாகக் காஞ்சி மண்டலத்தில் இருந்தவற்றைப் பற்றி மாத்திரம் சொல்கிறேன். காஞ்சீபுரம் எப்போதுமே நானாவித சாஸ்த்ர வித்யைக்கும், பல ஸமயங்களின் தத்வ விசாரம், விவாதம் முதலியவற்றுக்கும் ஒரு கேந்த்ர ஸ்தானமாய் இருந்திருக்கிறது. கல்வியைக் கரையிலாத கச்சி மாநகர் என்று அப்பர் ஸ்வாமிகளே புகழும்படியான பெருமை அதற்கிருந்தது. அப்பர் சொன்னார் என்பதில் தனிச் சிறப்பு உண்டு. ஏனென்றால் சில ஞானிகள், மஹான்கள் இருப்பார்கள். அவர்களுக்கு ஈச்வரானுபவமும் அனுக்ரஹ சக்தியும் நிரம்ப இருக்கும். ஆனால் கல்வியறிவு என்று பார்த்தால் விசேஷமாக இருக்காது. 'அது வேண்டாம்' என்று தள்ளி விட்டுப் போனவர்களாகக்கூட இருப்பார்கள். ஸமீபத்தில் ராமக்ருஷ்ண பரமஹம்ஸர் இப்படித்தான் இருந்திருக்கிறார். வேறு சில மஹான்களைப் பார்த்தால் கல்வியிலும் அவர்கள் கரைகண்டவர்களாக இருப்பார்கள். ராமக்ருஷ்ணரின் ப்ரதம சிஷ்யர் விவேகானந்தர் இப்படி இருந்தவர்தான். அப்பர் ஸ்வாமிகளும் இப்படிப்பட்டவர்தான். தர்மஸேனர் என்ற பெயரில் அவர் இடைக்காலத்தில் சமணராக இருந்தபோது, அந்த மத ஸித்தாந்தங்களைத் திருப்பாதிரிப்புலியூரிலிருந்த அவர்களுடைய பள்ளியில் பூர்ணமாகக் கற்றுத் தேர்ந்திருக்கிறார். எளிமையிலும் எளிமையை அவரிடம் பார்க்கும் போதே, அவருடைய தேவாரங்களில் எங்கே தொட்டாலும் உபநிஷத் உள்பட அனேக சாஸ்த்ரங்களில் ஆழ்ந்த அறிவையும் பார்க்கிறோம். இப்படிப்பட்டவர் கல்விக்குக் காஞ்சி என்று விசேஷித்துச் சொன்னால் அது நிஜமாகவே விசேஷந்தானே!

காஞ்சீபுரம் ஸர்வஜ்ஞ பீடம் இருந்த ஊர். ஸகல சாஸ்த்ர பண்டிதர்களும் கேள்விகள் கேட்டு அத்தனைக்கும் பதில்

சொல்கிறவர் மட்டுமே ஏறி உட்காரக்கூடிய பீடத்துக்குத்தான் ஸர்வஜ்ஞ பீடம் என்று பெயர். அந்தப் பீடத்துக்கு நாலு வாசல் இருக்கும், எத்தனையோ படி இருக்கும். ஒவ்வொரு படியிலும் ஒரு ப்ரதிமை இருக்கும், அந்தப் பொம்மைகள்கூடக் கேள்வி கேட்கும். 'இதுக்குப் பதில் சொன்னால்தான் அடுத்த படி ஏறலாம்' என்று சொல்லும் – என்றெல்லாம் படிக்கிறோம். அதெல்லாம் எப்படிப் போனாலும் மஹா பண்டிதர்களாக இருந்தவர்கள் பல சாஸ்த்ர விஷயமாகவும் கேள்வி கேட்டுப் பதில் சொல்லக் கூடியவர்தான் ஸர்வஜ்ஞ பீடம் ஏற முடியும் என்பது நிச்சயம். இப்படி நம்முடைய ஆசார்யாள் காஞ்சீபுரத்தில் ஸர்வஜ்ஞ பீடாரோஹணம் செய்திருக்கிறார்!

ஹிந்து மதம் மட்டுமில்லாமல் பௌத்தம், சமணம் ஆகியனவும் அவற்றின் பெரிய அறிஞர்களும் காஞ்சீபுரத்தில் பிரகாசமாயிருந்திருப்பது சரித்ர பூர்வமாகத் தெரிகிற உண்மை. திங்நாகர், தர்மபாலர் முதலான பௌத்த அறிஞர்கள் காஞ்சீபுரத்தைச் சேர்ந்தவர்கள்தான். மணிமேகலை, அறவணவடிகள் என்பவரிடம் பௌத்தமதத் தீக்ஷை பெற்றது இங்கேதான். திருப்பருத்திக்குன்றம் என்ற காஞ்சீபுரத்தின் பகுதி பெரிய சமண கேந்திரமாயிருந்திருக்கிறது. சமய நூல், தத்வ ஆராய்ச்சி என்று போகாமல், ஒரு விதமான (வேத ஸம்மதமில்லாத) ஆவேச வழிபாட்டுமுறைகள் மட்டுமேயான காபாலிகம், காளாமுகம் முதலான உக்ர மார்க்கங்களும்கூடக் காஞ்சி மண்டலத்தில் வேரூன்றப் பார்த்திருக்கின்றன. அஷ்ட காளிகளை ஆசார்யாள் இங்கே அடக்கிப் போட்டு அம்பாள் காமாக்ஷிக்கு முன்னால் ஸ்ரீ சக்ரம் பிரதிஷ்டை செய்திருக்கிறார். ஆனால் (கல்வியைக் குறித்த) நம் ஸப்ஜெக்டுக்கு அது ஸம்பந்தமில்லாத விஷயம். ஹிந்து ஸமயத்திலேயே உள்ள பல ஸித்தாந்திகளும், பௌத்தம் – சமணம் போன்ற புறச் சமய அறிவாளிகளும் ஏராளமாக நிறைந்திருந்து வாதப்போர்கள் நடத்திய இடமாகக் காஞ்சி இருந்ததுதான் நான் சொல்ல வந்தது. இதைப் பற்றி நிறையச் சொல்லலாமானாலும் இப்போது அந்தக் கதை வேண்டாம். ஏனென்றால் புதுசாக நான் கண்டு பிடித்திருக்கிற கதையைச் சொல்ல வேண்டும்.



# 'என் ரிஸர்ச்': கடிகை பற்றி

இதைச் சொல்வதற்குத்தான் பூர்வ பீடிகையாகக் குரு - வாத்யார் என்று ஆரம்பிக்கப் போக அது எங்கெங்கேயோ இழுத்துக் கொண்டு போய்விட்டது. என் புதுக் கதையை, என் 'ரிஸர்ச்'சை இனிமேல் 'டிலே' பண்ணப் போவதில்லை.

'கடிகா ஸ்தானம்', 'கடிகா ஸ்தானம்' என்று ஒரு வார்த்தை கேட்டிருக்கலாம், கேட்ட மாதிரியாவது இருக்கலாம், அல்லது கேட்காமலேகூட இருக்கலாம். ஹாஸ்யம் மாதிரிச் சொன்னாலும் வருத்தத்தோடு சொல்கிறேன். நம் பூர்விக சாஸ்த்ரங்கள், நம்முடைய வித்யாப்யாஸ முறைகள், அதற்கான ஸ்தாபனங்கள் ஆகியவை பற்றிப் பொது அறிவு தற்போது மிகவும் குறைந்துவிட்டதே என்று வருத்தமாக இருக்கிறது. நான் விஷயக்ஞர்கள் என்று நினைத்து கடிகா ஸ்தானத்தைப் பற்றிக் கேட்டவர்களில்கூட சிலருக்கு (அந்தப்) பேர் மட்டும் தெரிந்திருந்ததே தவிர அதைப்பற்றி எந்த விவரமும் தெரியவில்லை. இந்தக் கடிகா ஸ்தானங்கள் நம் ஊர்களிலேயே நிறைய இருந்திருக்க, இவர்களோ, 'கோதாவரி தீரத்தில்தான் கடிகா ஸ்தானம் என்ற பெயரில் வித்யாசாலைகள் இருந்ததாகத் தெரிகிறது. அதற்கு மேல் அதைப் பற்றி தெரியவில்லை' என்றார்கள். இந்த மட்டும் கடிகா ஸ்தானம் என்றால் வித்யாசாலை என்று தெரிந்து கொண்டிருக்கிறார்களே என்று கொஞ்சம் த்ருப்திப் பட்டேன்!

வித்யாசாலைகளிலும் நம்முடைய வேத சாஸ்த்ரங்களை மட்டுமோ அல்லது அவற்றோடு இதர கலைகளையும் அந்தக் கால ஸயன்ஸ்களையும் சேர்த்தோ போதித்தவற்றுக்குத்தான் கடிகா ஸ்தானம் என்று பேர். பிற்காலத்தில் வேண்டுமானால் வேத வித்யா ஸம்பந்தமில்லாத கலாசாலைகளுக்கும் இந்தப் பேர் வந்திருக்குமோ என்னவோ? ஒரிஜினலாக வேதாப்

யாஸத்தை மையமாகக் கொண்டவற்றுக்கே இந்தப் பெயர். 'கடிகை' என்று தமிழில் சுருக்கிக் குறிப்பிடுவார்கள். குருகுல மாக இல்லாமல், பல வாத்யார்கள் ஏராளமான மாணாக்கர் களுக்கு வேதம், அல்லது வேதத்தோடு 'ஸெக்யுலர் எஜுகே ஷன்' (உலகியல் படிப்பு) சொல்லிக் கொடுத்த கலாசாலை களும் இருந்தன என்றும், புத்தருக்கு முந்திக் குறைச்சலாக இருந்த இவை, அவருக்குப் பிற்பாடு நிறைய ஏற்பட்டன என்றும் சொன்னேனல்லவா? இவற்றுக்குத்தான் கடிகா ஸ்தானம் என்று பேர் என்ற அளவுக்குக் கொஞ்சம் ஆராய்ச்சி யிலேயே புரிந்து கொண்டேன். காஞ்சி மண்டலத்தில் இருந்த தாக நான் சொன்ன கல்வி நிலையங்கள் இப்படிப்பட்ட கடிகா ஸ்தானங்களே, கோதாவரிக்கும் போக வேண்டாம், கங்கோத் ரிக்கும் போக வேண்டாம்.

அடுத்த ஆராய்ச்சி என்ன என்றால் எங்கெங்கே இவை இருந்தன என்று சரித்ரத்தை, இலக்கியத்தை, சாஸனங்களைத் தோண்டிப் பார்த்தது. இப்படி நிறையத் தோண்டித் துருவினேன். (அதிலே) கொஞ்சம், பின்னால் சொல்கிறேன். என் பெருமை அடித்துக் கொள்வதற்குத்தானே ஆரம்பித்திருக் கிறேன்!

இதைவிட எனக்கு ரொம்பக் குதூஹலம் (அதாவது curiosity) ஏற்படுத்தி ஆராய்ச்சியில் இறக்கிவிட்ட விஷயம் என்னவென்றால் 'கடிகை' என்று ஏன் பேர் வந்தது? என்பது தான்.

'கடிகை' என்றால் சின்னதான பானை என்று ஓர் அர்த்தம். கடம்: பெரிய பானை. கடிகை: அதைவிடச் சின்னப் பானை. கடிகை என்றால் ஒரு நாழிகைப் பொழுது என்று இன்னொரு அர்த்தம். அந்த வார்த்தை எந்த அர்த்தத்தில், அல்லது எந்த விதத்தில் வித்யாசாலைக்குப் பெயராக இடப்பட்டது என்று கண்டுபிடிக்க வேண்டும் என்று ஆர்வம் உண்டாயிற்று. நான் கேட்டுப் பார்த்த யாருக்கும் சொல்லத் தெரியவில்லை. கடைசியில் எத்தனையோ தோண்டித் துருவியதில் – என்னு டைய ரிஸர்ச்சில் பாஸ் பண்ணிவிட்டேன். அந்தப் பெருமை அடித்துக் கொள்ளத்தான் இப்போது கதையளந்து கொண் டிருக்கிறேன்.

மெட்ராஸில் இருக்கிற ஓரியண்டல் மானுஸ்க்ரிப்ட் லைப்ரரிக்காரர்கள் தங்களிடமுள்ள சுவடிகளில் பலவற்றை அச்சுப்போட்டு வருகிறார்கள். ஸமீபத்தில்★ அவர்கள் போட்டிருந்த 'ஆபோகம்' என்ற புஸ்தகத்தைப் படித்துப் பார்த்துக் கொண்டிருந்தேன். இது என்ன புஸ்தகம் என்று சொல்ல வேண்டுமானால் இதற்கு அப்பாப் புஸ்தகம், தாத்தாப் புஸ்தகம், கொள்ளுத்தாத்தா புஸ்தகம் முதலியவற்றைப் பற்றிச் சொல்லியாக வேண்டும். இவையெல்லாம் அத்வைத சாஸ்த்ரங்களானபடியால் உங்களுக்கும் கொஞ்சம் தெரிந்திருப்பது நல்லதுதான். சொல்கிறேன்.

வ்யாஸர் 'ப்ரஹ்ம ஸூத்ரம்' செய்திருக்கிறார். அதற்கு ஆசார்யாள் பாஷ்யம் பண்ணியிருக்கிறார். அந்தப் பாஷ்யத்துக்கு பாஷ்யம் மாதிரி விளக்கவுரை வாசஸ்பதி மிச்ரர் செய்திருக்கிறார். இதற்கு 'பாமதி' என்று பெயர். வாசஸ்பதி மிச்ரருடைய பத்னியின் பெயர் பாமதி. அந்தப் பெயரையே புஸ்தகத்துக்கு வைத்தார். பாஷ்யத்தின் பாஷ்யமான இதற்கும் பாஷ்யம் மாதிரி அமலானந்தர் என்பவர் 'கல்பதரு' என்று எழுதியிருக்கிறார். அந்தக் 'கல்பதரு'வுக்கும் விளக்கவுரையாக லக்ஷ்மிந்ருஸிம்ஹர் என்பவர் எழுதியதுதான் 'ஆபோகம்'. அதாவது 'ப்ரஹ்மஸூத்ர'த்தின் குழந்தை அதற்கு ஆசார்யாள் செய்த பாஷ்யமென்றால், பேரக் குழந்தை 'ஆபோகம்!'

அந்தப் புஸ்தகத்தைப் பார்த்ததிலிருந்து, ஒரு ரெஃபரன் ஸுக்காக அதன் அப்பாப் புஸ்தகமான 'கல்பதரு'வைப் பார்க்க வேண்டி வந்தது. அதிலே ஓரிடத்திலே கடிகா ஸ்தானத்தைப் பற்றி வருகிறது.

எந்த இடத்திலே என்றால், ப்ரஹ்ம ஸூத்ரத்தின் மூன்றாம் அத்யாயம், நாலாம் பாதம், இருபதாம் ஸூத்ரத்தை விளக்கும் இடத்திலே. ஸன்னியாஸ ஆச்ரமம் என்பது உண்டு என்று ஸூத்ரகாரர் (வ்யாஸர்) அபிப்ராயப்படுகிற இடம். 'க்ருஹஸ்தன் பண்ணும் வைதிகக் கர்மாவினாலேயே அவனுக்கு நேராக மோக்ஷம்; வைதிகக் கர்மாவை விட்ட ஸன்னியாசம் கூடாது என்கிற ஜைமினியின் பூர்வ மீமாம்ஸைக் கொள்கையை

---

★ இப்பகுதியை ஸ்ரீசரணர்கள் 1965-ல் அருளினார்.

ஆக்ஷேபித்து இங்கே வ்யாஸாசார்யாள் துரீயாச்ரமத்தை (நாலாவது ஆச்ரமமான துறவறத்தை) ஸ்தாபித்திருக்கிறார்.

ஸன்னியாஸியின் லக்ஷணம் என்ன என்று இங்கே 'கல்பதரு' வில் அமலானந்தர் கொடுத்திருக்கிறார். ஸன்னியாஸி என்பவன் சிகையை எடுத்துவிட்டு முண்டனம் பண்ணிக் கொள்ள வேண்டும் (மொட்டை அடித்துக் கொள்ள வேண்டும்), பூணூலை அறுத்துப் போட்டுவிட வேண்டும் என்றுதான் பொதுவிலே வைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் சிகையையும் பூணூலையும் கத்தரிக்காமலே ஸன்னியாஸி இருக்கலாமென்ற வழக்கத்தைச் சிலர் வைத்துக் கொண்டிருக்கிறார்கள் – பிற்காலத்தில் வந்த ராமானுஜ ஸித்தாந்தத்தில் இந்த வழக்கம் தான். இதில் எது ஸரி என்று இங்கே 'கல்பதரு'க்காரர் தம் அபிப்ராயத்தைச் சொல்கிறார்:

'யேது சிகா யஜ்ஞோபவீத த்யாக ரூப பாரம ஹம்ஸ்ய வ்ருத்திம் ந மந்யந்தே தே ந பச்யந்தி ப்ரத்யக்ஷ கடிகாஸ் தாநேஷு பட்யமாந ஆதர் வணீம் ச்ருதிம் – ஸசிகம் வபநம் க்ருத்வா பஹிஸ் ஸூத்ரம் த்யேஜத் புத:'

'ஸன்னியாஸிகளில் உச்சமான பரமஹம்ஸ முறைக்குப் போகிறவன் தலையைப் 'பண்ணிக்' கொள்ள வேண்டாமென்றும், பூணூலைக் கத்திரித்துப் போட வேண்டாமென்றும் சொல்கிறவர்கள், 'ஸன்னியாசாச்ரமம் எடுத்துக் கொள்ளும் புத்திமான் சிகையை எடுத்துவிட்டு, பூணூலையும் துறந்துவிட வேண்டும்' என்று கடிகாஸ்தானத்திலே அத்யயனம் செய்பவர்கள் சொல்லும் அதர்வ வேத வாக்கைக் கேட்டதில்லை போலிருக்கிறதே!' என்று அர்த்தம்.

அடுத்த புத்தகத்தில்...

குரு என்கிற தலைப்பின்கீழ்க் கட்டுரைகள் இடம்பெறுகின்றன.

